

பிரம்மஸ்ரீ, ஸ்ரீராமலிங்க
பிரம்மானந்தயதீசுவரஸ்வாமிகள்.

# முகவுரை.

ஸ்ரீ ராமலிங்க பிர்மானந்த குருவேநம:.

நேரிசை வெண்பா.

சீர்பூத்த செல்வத் திருவாலவாயதனில்
தார்பூத்த ராமலிங்கத் தற்பரனும்—ஏர்பூத்த
ஞான வடிவாகி நன்மையுறு நற்குருவா
மானவன் றன்னருளினால்.

சகலமான ஜகத்திற்கதிட்டானமாயும் நித்திய நிரஞ்சன நின்மல வடிவமாயும் சர்வ வியாபகமாயும் ஸ்வகதஸஜாதீய விஜாதீய பேதமற்றதான ஏகமேவாத் துவிதீய சத்வஸ்துமாத்திரமாயுமிருக்கிற பிர்மம் சிருட்டிக்குமுன் பிரகாசித்தது. அநாதிகாலமாயிருக்கிற அவித்தியாவாசனையாற் கட்டுண்ட ஜீவர்கள் கற்பாந்தத்தில் சகல வாசனைகளுடன் மெழுகுருண்டையில் சொர்ண இரேணுக்கள் அடங்குவனபோல் லயமாயிருந்தார்கள். முற்பிறப்பிற்செய்த புண்ணியகன்ம விசேடத்தாலும், மாயாசக்தியின் விசித்திரத்தாலும், பழுதையிற் பாம்புபோல் சமாய பிர்மத்தில் இச்சகம் முதலான சகல கற்பனைகள் உண்டாயின. முன்னுரைத்த சக்தியின் மகிமையால் அட்சர உருவனான ஈசனிடத்திருந்து மூச்சுக்காற்றைப்போல் இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்கிற நான்மறைகளுண்டாயின. இருக்கு உக (21) சாகையுடனும், எசுர் ௱கூ (109) சாகையுடனும், சாமம் ௲ (1000) சாகையுடனும், அதர்வணம் ருய (50) சாகையுடனும் விரிவாகி ஒவ்வொரு சாகைக்கும் ஒவ்வொரு உபநிடதமேற்பட்டது. அவைகளிலிருந்து சக்கிரவர்த்தித் திருமகனான ஸ்ரீ ராமபிரான் மகா புத்திமானும் சர்வசாத்திர சம்பன்னனும் நவவியாகரணியாயும் இராமகாரிய துரந்தரனாயுமிருந்த அஞ்சனேயனானவனுக்கு அவ்வுபநிடதசாரார்த்தங்களை "ஈசாவாசியம்" முதல் "முக்திகோ" உபநிடதமீறாய் ௱அ (108) உபநிடதங்களாய் முன் விரித்துரைத்தனர். அதின் சாரமறிய சக்தியற்றவர்களாயும், சமுசார சாகரத்தில் அழுந்திக்கரையேற வல்லமையற்றவர்களாயுமிருக்கிற சகல மானுடர்களும் பயங்கடந்திடப் பாக்கியராக, யரு (15) பிரகரணங்களடங்கிய பஞ்சதசி யென்கிற நன்னூலை வடமொழியில் மகாத்மாவாயும், சர்வஞானபுத்தியாயும், பரமகுரு பாஷியகாரருமான ஸ்ரீ வித்தியாரண்ணியமாமுனிவரால் இயற்றப்பட்டது. அன்னோர் சீடகோடிகளிலொருவரான ஸ்ரீ இராமகிருஷ்ண வித்வானால் வடமொழியிலேயே வியாக்கியானம் செய்யப்பட்டுளது. அதைத் தற்போதன்றி மற்றோர் தெற்றெனவறிதல் சிரமசாத்தியமானதால், கல்வி, அறிவு, ஒழுக்கம் மூன்றுமொருங்கே பெற்றவரான ஸ்ரீ ராமலிங்க சாஸ்திரிகளென்ற பிரமானந்த யதிகளால் பூர்வ ஆசி

ரமத்திலேயே மேற்கூறிய நாலிற்குத் தெளிவான பதவுரையும், அன்வயரூப
மான பொருளும், அவ்விடங்களுக்கேற்ப புத்திக்கெட்டாத சமயோசித யுக்
திகளும், மற்றையமேற்கோள்களும் வேண்டியமட்டில்சேர்த்துஎழுதிவைத்த
பிரதியைக்கொண்டு அன்னோர் ஜேஷ்ட புத்திரனான யான் நன்கு சோதித்து
ம், அத்துடன் என்னால் இயற்றபட்டிருக்கிற ஒவ்வொரு பிரகரணத்திற்கு மு
ன் அப்பிரகரணசாராம்சத்தை சங்கிரமாக தொகுத்து நல்ல செந்தமிழ்நடை
யிலெழுதிச்சேர்த்தும்.நம்குருதைவமான ஸ்ரீ ராமலிங்க விஜயமென்ற சம்
ஸ்கிருத சுலோகங்களும், அதினர்த்தம் தமிழ்நடையில் என்னாலெழுதிச்சேர்
க்கப்பட்ட புத்தகத்தையும் சம்ஸ்கிருத வித்துவானான ஸ்ரீநிவாசாரியாளாலு
ம் தமிழ் புலவரான மதுரை தெற்கு ஆவணி மூலவீதி ஸ்கூல்மாஸ்டர். எம்.
கோவிந்தசாமி ஐயராலும் நன்கு பரிசோதிக்கச்செய்து சுலோகங்களை தேவ
நாகர எழுத்துகளிலும், கிரந்த எழுத்துகளிலும், மேற்கூறியவைகளை ஒரே பு
த்தகமாக சுத்தப்பதிப்பிலும் அச்சிட்டு நல்ல காலிகோபயிண்டிலும் பயண்டு
செய்து விலைக்கி தயாராய் வைத்திருக்கிறேன். இப்புத்தகம் ரிஜிஸ்டர் கா
பிரைட்டுடன் கூடியிருப்பதால் தபால் சார்ஜ் நீங்கலாக இதின் விலை ரூபா.
3-8-0. இப்புத்தகத்திற்கு முன் பணம் வெகுபேர்கள் கொடுத்திருப்பதாலு
ம் காபிகள் சொல்பமாய் போட்டிருப்பதாலும் ஜாக்கிரதையாய்அடியிற்கண்
டவிலாசத்திற்கு எழுதி பெற்றுக்கொள்ளலாம். புத்தகம் துரிதமாக அச்சு
போட்டமையால் அதில் என்னை யறியாமல் சில பிழைகள் ஏற்படகூடும். அ
தை பெரியோர்கள் மன்னித்து குற்றம் நீக்கிக்குணத்தைக்கைக்கொள்வீர்க
ளாக.இப்புத்தகம் நம்பிதாவால் சுமார் (26)வருடத்திற்கு முன் எழுதியிருந்த
து. மதுரை. ம-ா-ா-ஸ்ரீ. நா. கி. நா. குப்பய்யரவர்கள்.சோழலிங்கா. வெங்கி
டகிருஷ்ணய்யவவர்கள் முதலான பக்த சிகாமணிகள் சிரமமெடுத்துகொண்டு
தங்கள் தங்களுக்கு வேண்டிய புத்தகங்களுக்கு முன்பணம் கொடுத்தும் ஷை
குப்பய்யரவர்கள் மற்றவர்களைக்காட்டிலும் ஜாஸ்தி புத்தகங்களுக்குப்பணம்
கொடுத்ததுமன்றி. புத்தகம் முடிவு பெறமார்க்கமில்லாதிருந்ததைக்குறித்து
என் வேண்டுகோளுக்கிணங்கி பைண்டுமுதலான சகல சிலவுக்கு வேண்டிய
ரூபாயை தடையன்றியில் கொடுத்து முடிக்கச்செய்து அழியாத தர்மத்தை
க்கைக் கொண்ட அவர்களின் வம்சபாரம்பரியமா யிப்போதிருக்கும் செல்வ
த்தினும்அதிகமாய் நீடூழி காலம் வரை சுகமாய் வாழக்கடவர்களென நம்தேவ
னை வணங்கிக்கொண்டிருக்கிறேன், ஞானசாகர முத்திராக்ஷரசாலாதிபரா
ன, தி. துளசிலிங்கஞ்செட்டி யவர்கள் விரைவில் ரெம்பசிரமமெடுத்து முடி
த்து கொடுத்ததைப்பற்றி மிக்க நன்றி பாராட்டுகின்றேன்.

தங்களன்புள்ள நேசன்,

எம். ஆர். சுந்தரராம சாஸ்திரிகள்,

நெம்பர் 4, கணபதி அக்கிரகாரம், மதுரை.

𑌶𑍍𑌰𑍀𑌰𑌸𑍍𑌤𑍁.

𑌶𑍍𑌰𑍀𑌗𑌣𑍇𑌶𑌾𑌯 𑌨𑌮𑌃.

𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌗𑍁𑌰𑌵𑍇 𑌨𑌮𑌃.

---

## 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌵𑌿𑌜𑌯𑌃.

---

𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑌣𑌪𑌤𑌿𑌂 𑌦𑍇𑌵𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌶𑍍𑌰𑍀𑌨𑌵𑌿𑌨𑍋𑌦𑌨𑌾𑌥𑌮𑍍 । 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌸𑌾𑌮𑍍𑌬𑌨𑌾𑌯𑌕𑌂 𑌚 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌸𑌾𑌮𑍍𑌬𑌤𑌾𑌣𑍍𑌡𑌵𑌮𑍍 ॥ 1 ॥ 𑌶𑍍𑌰𑍀𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌵𑌿𑌨𑍋𑌦𑌹𑌿𑌂𑌕𑌾𑌰𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌾𑌹𑍋𑌤𑍍𑌥𑌕𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌚𑌰𑌿𑌤𑌂 𑌪𑌰𑌮𑌾𑌯𑍁𑌧𑌂 𑌚 । 𑌶𑍍𑌰𑍀𑌵𑌿𑌶𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌚𑌾𑌰𑍁𑌪𑍋𑌰𑍁𑌨𑌿𑌶𑌂 𑌸𑌾𑌪𑌜𑍍𑌯𑌂 𑌶𑍍𑌰𑍀𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑍇𑌖𑌰𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌦𑌂 𑌚𑌾𑌹𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿 ॥ 2 ॥ 𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌦𑍇𑌶𑍀𑌯 𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌦𑍇𑌶𑌿𑌕𑌵𑌰𑌂 𑌶𑍍𑌰𑍀𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 𑌶𑍍𑌰𑍀𑌵𑌾𑌣𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌿𑌶𑍇𑌷𑌪𑍂𑌜𑌿𑌤𑌪𑌦𑌂 𑌶𑍍𑌰𑍀𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌤𑍍𑌤𑌂 𑌵𑌿𑌭𑍁𑌮𑍍 । 𑌶𑍍𑌰𑍀𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌪𑌙𑍍𑌕𑌜𑌾𑌰𑍍𑌪𑌿𑌤𑌕𑌰𑍁𑌣𑌾𑌦𑍋𑌦𑌾𑌰𑌕𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌂 𑌸𑌪𑌰𑍍𑌯𑌾 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌸𑍁𑌨𑍍𑌦𑌰𑌤𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌹𑍍𑌵𑌯𑌗𑍁𑌰𑍁𑌂 𑌶𑍍𑌰𑍀𑌬𑍋𑌧𑌵𑌿𑌜𑍍𑌞𑌂 𑌶𑌿𑌵𑌮𑍍 ॥ 3 ॥ 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌨𑌿𑌜𑌪𑍍𑌰𑌭𑌕𑍍𑌤𑌿𑌦𑌾𑌯𑌕𑌜𑌨𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌦𑌾𑌂𑌵𑌰𑌂 𑌶𑌿𑌵𑌮𑍍 𑌚𑌾𑌯𑌾𑌕𑌾𑌯𑌪𑌰𑌿𑌶𑍀𑌲𑌨𑌚𑌰𑍍𑌯𑌯𑌾𑌦𑌂 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌕𑍋𑌵𑌿𑌦𑌮𑍍 । 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌨𑌯𑌪𑍍𑌰𑌯𑌚𑌯𑌵𑌰𑌂 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌹𑍍𑌵𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌗𑍁𑌰𑍁𑌂 𑌶𑌰𑌣𑍍𑌯𑌚𑌰𑌣𑌂 𑌹𑍃𑌦𑌯𑍇 𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑌂𑌸𑍍𑌥𑌂 𑌭𑌜𑍇 ॥ 4 ॥ 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌦𑍇𑌶𑌿𑌕𑌦𑍇𑌶𑌿𑌕𑌂 𑌬𑍁𑌧𑌜𑌨𑌾𑌨𑌨𑍍𑌦𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌚𑌾𑌰𑍁𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌷𑍍𑌕𑍃𑌤𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌸𑌾𑌯𑌂 𑌜𑌨𑌾𑌶𑍍𑌰𑌯𑌂 𑌚 𑌵𑌰𑌦𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌵𑌰𑌂 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌮𑍍 । 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌤𑌗𑌤𑌿𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌾𑌯𑍁𑌧𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌪𑌾𑌪𑌵𑌿𑌨𑌾𑌶𑌕𑌂 𑌸𑌾𑌮𑌗𑌮𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌵𑌿𑌶𑌾𑌲𑍇𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 ॥ 5 ॥ 𑌸𑌦𑍍𑌵𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌰𑍂𑌪𑌾𑌯 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾𑌂 𑌪𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃 । 𑌸𑌰𑍍𑌵𑌲𑌕𑍍𑌷𑌣𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌯 𑌤𑍇 𑌨𑌮𑌃 ॥ 6 ॥ 𑌶𑍍𑌰𑍀𑌕𑍇𑌲𑍍𑌯𑌾𑌸𑌚𑌹𑌾𑌦𑍍𑌰𑌿𑌸𑌳𑌶𑍍𑌰𑍃𑌙𑍍𑌗𑌶𑌿𑌖𑌰𑌸𑍍𑌥𑌳𑌵𑌣𑌾𑌰𑌦𑍍𑌵𑍇𑌷𑌿𑌤𑌂 𑌶𑍍𑌰𑍀𑌵𑌿𑌷𑍍𑌣𑍍𑌵𑌾𑌦𑌿𑌸𑍁𑌰𑌳𑌵𑌵𑌨𑍍𑌦𑌿𑌤𑌪𑌦𑌂 𑌦𑍇𑌵𑍀𑌵𑍍𑌯𑌾𑌸𑌾𑌨𑌂 𑌶𑌿𑌵𑌮𑍍 । 𑌨𑌕𑌾𑌰𑌾𑌖𑍍𑌯𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌦𑍇𑌶𑌿𑌕𑌵𑌰𑌂 𑌚𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑌾𑌦𑍍𑌯𑌿 𑌭𑌿𑌦𑍋𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌵𑌰𑌂 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌦𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑌕𑌃 ॥ 7 ॥ 𑌕𑌦𑌾𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌰𑌦𑍋𑌯𑍋𑌗𑍀 𑌕𑍃𑌪𑍇 𑌸𑌞𑍍𑌚𑌾𑌰𑌯𑍇𑌦𑌥 । 𑌸𑌵𑍇𑌷𑍍𑌟𑌾𑌮𑍍𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂𑌕𑌷𑍍𑌟𑌂 𑌵𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌸𑍋𑌽𑌨𑍁𑌕𑌮𑍍𑌪𑌾𑌕𑍃𑌤𑍍 ॥ 8 ॥ 𑌅𑌨𑌨𑍍𑌤𑌗𑍁𑌣𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌯𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮 𑌜𑍀𑌵𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌂 𑌵𑍍𑌯𑌜𑍀𑌜𑌨𑌤𑌵𑌾𑌃 । 𑌕𑍇𑌨𑍋𑌪𑌾𑌯𑍇𑌨 𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌨𑍍𑌮𑍁𑌚𑍍𑌯𑍇𑌤𑍇 𑌸𑍋𑌦𑌰𑌾 𑌜𑌨𑍇 ॥ 9 ॥ 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌪𑌿𑌤𑌃 𑌸𑍍𑌵𑌸𑍍𑌥 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌚𑌕𑍇𑌶𑌵𑌃 । 𑌅𑌹𑌮𑍍𑌚𑌾𑌵𑌿𑌭𑍁𑌵𑌿𑌷𑍍𑌣𑍍𑌵𑍀𑌕𑍍𑌷𑍍𑌯𑍋𑌪𑌾𑌯𑌂 𑌕𑌾𑌨𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥ 10 ॥ 𑌚𑌤𑍁𑌰𑌾𑌯𑌾𑌮𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑌾𑌣𑍍𑌡𑍇𑌕𑌚𑍁𑌤𑍁𑌰𑍍𑌵𑌂𑌶𑌾𑌸𑍍𑌵𑌿𑌕𑌳𑌸𑍍𑌵𑌾𑌹𑍋𑌃 । 𑌸𑌂𑌹𑌵𑌾𑌦𑌿 𑌵𑌾𑌨𑍍𑌤𑌶𑍍𑌰𑍀𑌵𑍍𑌯𑌂 𑌸𑌾𑌯𑌮𑍇𑌨𑌾 𑌮𑍋𑌕𑍍𑌷𑌵𑌿𑌦

സമാധിമപരോക്ഷം തത്പരോക്ഷം ബ്രഹ്മലക്ഷണമ് | പ്രജ്ഞാനം ബ്രഹ്മവാക്യാർത്ഥം ഋഗ്വേദാന്തർഗതം [illegible] || ൫൨ || അഹംബ്രഹ്മാസ്മിവാക്യാർത്ഥം യജുർവേദോദ്ഭവം പരമ് | തത്ത്വമസ്യാദി വാക്യാർത്ഥം ഛാന്ദോഗ്യോപനിഷദ്ഗതമ് || ൫൩ || അയമാത്മാ ബ്രഹ്മേതി ഹ്യഥർവണസമുദ്ഭവമ് | വാക്യാർത്ഥഞ്ച മഹാവാക്യം ജഹല്ലക്ഷണമേവ ച || ൫൪ || അജഹല്ലക്ഷണം നിത്യമജഹജ്ജഹല്ലക്ഷണമ് | സാമാനാധികരണ്യഞ്ച വിശേഷണവിശേഷ്യകമ് || ൫൫ || ലക്ഷ്യലക്ഷണസംബന്ധം നിർവ്വികാരസ്വരൂപകമ് | സവികല്പം നിർവികല്പം ദൃശ്യശബ്ദാനുവിദ്ധകമ് || ൫൬ || അന്തർദൃശ്യാനുരൂപഞ്ച ബഹിശ്ശബ്ദാനുവിദ്ധകമ്| സമാധിം ഷഡ്വിധം ചൈവ വിദ്വദ്ഭിഃ പരികീർത്തിതമ് || ൫൭ || അജ്ഞാനരൂപിക്രമഃ ജ്ഞാനരൂപിക്രമസ്തഥാ | ഘടാകാശമഹാകാശ ജലാകാശാഭ്രകം തഥാ || ൫൮ || കൂടസ്ഥബ്രഹ്മണോർഭേദം തഥാ ജീവേശയോരപി | ചൈതന്യത്വാദി രൂപഞ്ച സന്ദേഹത്രയനാശനമ് || ൫൯ || മഹാകർത്താ മഹാഭോക്താ മഹാത്യാഗിവിശേഷകമ് | മായാവിദ്യാസ്വരൂപഞ്ച പഞ്ചഭൂതസ്വരൂപകമ് || ൬൦ || ജീവന്മുക്തിസ്വരൂപഞ്ച രൂപനാശനമേവ ച | വിദേഹമുക്തിം ബഹുശോ രൂപനാശം പരം വിദുഃ || ൬൧ || ബാധാദൃഷ്ടിം സ്വപ്നദൃഷ്ടിം [illegible] ദൃഷ്ടികമ് | ദിവ്യാദൃഷ്ടിം പൂർണ്ണദൃഷ്ടിം ബാധാസാമാന്യമേവ ച || ൬൨ || ശ്രീമദ്വ്യാസവാക്യഞ്ച സ്വാനുഭൂതിമതഃ പരമ് | ഗുരൂപദേശവാക്യഞ്ച സാക്ഷാത്കാരാദിരൂപകമ് || ൬൩ || പ്രത്യക്ഷാദിപ്രമാണഞ്ച പ്രത്യഗ്ബ്രഹ്മാത്മരൂപകമ് | ബ്രഹ്മാനന്ദാദിവിദ്യാഞ്ച അഷ്ടകം വേദസംജ്ഞിതമ് || ൬൪ || കുടീചകാദി സന്ന്യാസം ജാബാലാദിശ്രുതൗ ശ്രുതമ് | ശ്രീമത്പരമഹംസാനാം [illegible] ക്രമം തഥാ || ൬൫ || ലോകായതാദി സാംഖ്യാന്തം ജീവവിഭ്രാന്തലക്ഷണമ് | [illegible] യോഗാന്തം ഈശ്വരഭ്രാന്തലക്ഷണമ് || ൬൬ || സംസാരചക്രഭ്രമണം കാര്യാശ്രിതകാരണമ് | സംസാരതാരണോപായം ജ്ഞാനമേവ പരം മതമ് || ൬൭ || [illegible] ന്യനേകാനി കർമ്മാണി ച പുനഃ പുനഃ | [illegible] ബോധയാമാസ സന്മുനിഃ || ൬൮ || [illegible] | [illegible] സ്വപ്നദൃഷ്ടാന്തമേവ ച || ൬൯ || [illegible] | [illegible] || ൭൦ || [illegible] | ഇത്യാദിബഹുദൃഷ്ടാന്തൈർബോധയിത്വാ നിരന്തരമ് || ൭൧ || [illegible]

ஸஹா | ஊமஹா விவுஸெுஶாய ஸாவுஹளஊய ஊமஹூ || ௧௧௦ ||
ஸ்ரீஊஸுஸஶஶதஸ்லூாகஂ ஶாஊஙிஂமஸூவணுநூ | யெஹஜஞிஊஹாதூந
ஷெயாஞிவாஶஊவகூ || ௧௧௧ ||

ஶாஊஙிஂமவிஜயஂ ஸஂவூணஂ்.

---

சுயம்பிரகாசரான கணேசனையும், ஸ்ரீ மீனாக்ஷியையும், சுந்தரேசுவரரையும், சுந்தரதாண்டவஞானசபாநாயகரையும் நமஸ்கரிக்கிறேன். சகல சம்பத்தும் பொருந்தின மதுவனக்ஷேத்திரமென்னும் கோவிலூரில் வசித்துக் கொண்டிருந்தவராயும், சாதனசதுஷ்டயத்துடன் கூடின மாணாக்கர்களுக்கு எதார்த்தமான பரமாத்தும ஞானத்தை ஈன்றருளுகின்றவராயும், அசுவத்தநாதர் முதலான சிடகோடிகளா லெப்பொழுதும் பூஜிக்கப்பட்டவராயு மிருக்கிற ஸ்ரீ முத்துராமலிங்க குருசிரேஷ்டரை நான் நமஸ்கரிக்கின்றேன். பரமசிவனுக் கதிகப் பிரியராயும், லக்ஷ்மி சரஸ்வதி முதலானவர்களினால் பூஜிக்கப்படுகிறவராயும், சாந்தமான மனதுடன் கூடினவராயும், எப்பொழுது மானந்த நடனம் புரியு மன்பனிடத்தில் மனதைச் செலுத்தி பிர்மானந்தத் திருப்தி யுடையவராயும், ஞானக்கடலாயும், சர்வவியாபகராயுமிருக்கிற அசுவத்தேச யதீந்திரருக்கு வந்தனம் புரிகின்றேன். அழியாதவராயும், மும்மலங்களற்றவராயும், இரண்டற்றவராயும், மூப்பற்றவராயும், அறிவுருபராயும், மாயாகாரியமற்றவராயும், சிவனையும், நாசமற்ற பதத்தி லிருப்பவராயும், கோபமற்றவராயும், மூன்றுகாலங்களிலுமிருப்பவராயும், அறிவுக்கட்டியாயும், இம்மாம்சக் கண்ணா லறியத்தகாதவராயும், மாயைக் கப்புறப்பட்டவராயும், ஸ்ரீ ராமலிங்கமென்ற பெயரையுடையவராயும், சரணாகதியடைய யோக்கியராயு மிருக்கிற பிர்மானந்தகுருவை அடிக்கடி நான் எப்பொழுதும்பூஜிக்கின்றேன். உலகத்திலுள்ள குருக்களுக்குக் குருவாயும், சுரர்களால் துதிக்கப்படுகிறவராயும், மாலால் பூஜிக்கப்பட்டவராயும், தன்னையடைந்த நண்பர்களுக்கிருப்பிடராயும், வேண்டும் வரத்தை அளிக்கிறவராயும், சிரேஷ்டராயும், அழிவில்லாதவராயும், சகலகலைகளையும், சாஸ்திரங்களையு மறியும் புத்தியைக் கொடுப்பவராயும், ரகசியார்த்தங்களைத் தெரிவிக்கிறவராயும், பாபத்தைப் போக்க வல்லமை யுடையவராயும், தேவகுருவாயும், விசாலமான நேத்திர வீக்ஷண்ணியமுடையவராயுமிருக்கிற குருவை அடிக்கடி வணங்குகின்றேன். சச்சிதானந்தரூபராயும், உலகத்திலுள்ள சூரியாதி அஷ்டப்பிரகாசங்களுக் கப்புறப்பட்ட சுயம்பிரகாசராயும், அனேகவிதலக்ஷியராயுமிருக்கிற பிர்மானந்த குருவின் பொருட்டு ஸ்துதி செய்கின்றேன். சகல நீர்வளமும், நிலவளமும், அஷ்டைசுவரியங்களும் பொருந்திய கைலையங்கிரியின்கண் வேதாந்தமாகிற நவரத்தின

பீடத்தில் எழுந்தருளியிருக்கின்றவராயும், விஷ்ணுமுதலான தேவக்கூட்டங்
கள் வணங்கும் பாதகமலங்களை யுடையவராயும், சுவப்பிரகாசராயு மிருக்கிற
பரமசிவனை வணங்கியும், பரமகுருவான அசுவத்தேச யதீந்திரரையும் நமஸ்க
ரித்து சர்வவியாபியான ஈசனனுக்கிரகத்தினால் பிர்மானந்த சரித்திரத்தை பா
லனாகிய நான் தெறிந்தமட்டி லுரைக்கின்றேன். பூர்வத்திலொருக்கால் நாரத
மகா முனிவர் சகல லோகங்களிலும் தெய்வானுக்கிரகத்தால் சஞ்சரித்துக்
கொண்டு, இக்கலியுகத்தில் பூலோகமடைந்து, இப்புவியில் சம்சார துன்பத்
தால் வருந்துகின்ற தன் சகோதரர்களான பிராணிகளின் துக்கத்தைக்கண்டு
சகிக்கமாட்டாதவராய் வெள்ளியங்கிரியில் விளங்குகிற பரமசிவனை யடைந்து
தன்னுறவினர்கள் படுந் துயரத்தை வெளிப்படுத்தினார். ஏ தேவா எவ்வித
உபாயத்தால் என்னுடன் பிறந்தோர் சம்சாரபந்தத்திலிருந்து விடுபடுவார்க
ளோ, அவ்வித உபாயத்தை அனுக்கிரகிக்கவேண்டுமென்றுகேட்ட பிர்மகுமா
ரனுக்கு விடை அளிக்கின்றார். ஏ நாரதா அச்சீவர்கள் உய்யும்வண்ணம் யா
னவதரித்து இரக்ஷிக்கின்றேன், இதில் கிஞ்சிற்றேனும் சந்தேகமில்லையென்று
சொன்ன ஈசன் வார்த்தையைச் செவியுற்ற நாரதர் தாமவதரிக்கின்ற ஸ்தா
னத்தை வினவ, பரமசிவன் யான் ஜீவன்முக்தி புரமென்கிற மதுரைமாநகரின்
கண் மறையவர்குலத்தில் ஆத்திரேய கோத்திரமாகிற சமுத்திரத்திற்கு கவுஸ்
துபரெத்தினமாய் நல்லோர்களுக்கு முக்தி சித்திக்கும்பொருட்டு இந்த சுவ
யம்புவான ஜோதிர்லிங்கத்திலிருந்து ஆவிர்பாவமாய் திரும்பவும் ஜடிதியில்
இதில் லீனத்தையடைகிறேனென்ற சிவவாக்கியத்தை செவியுறக்கேட்ட அம்
முனியானவர் அனேகவிதமான வேதஸ்தோத்திரங்களினால், பக்திபரவசத்தால்
அரனைத் துதித்து மகரிஷிகளால் வணங்கப்பெற்ற நாரதரானவர் நாம் வந்த
காரியம் முடிவுபெற்றதென்ற சந்தோஷத்தினால் அத்தருணமே சத்தியலோ
கம் சார்ந்தனர். பிறகு சில்நாட்சென்று தயாளுவானதேவன் தன்னன்பனான
நாரதவாக்கியத்தை யுணர்ந்து, விகாரிவருஷம் தைமாதம் குருசந்திரர்கள்
நல்லராசியில் சஞ்சாரகாலமான சுவாதிநக்ஷத்திரமும்கூடின சோமவாரத்தில்
சுபலக்கினத்தில் பிராமணகுலத்தில் பிர்மசாக்ஷாத்காரத்தை யடைந்த ராம
சுவாமிசாஸ்திரிகளின்மனைவி மீனாக்ஷியினுடைய கருப்பகோளத்தில் ஜகன்னாத
ராயும், மனிதர்களா லெளிதிலறியக்கூடாதவராயும், சந்திரகலையை தரித்தவ
ராயு மிருக்கிற பகவான் மாயாமானுஷ விக்கிரகத்துட னாவிர்ப்பாவமானார்.
அது எதுபோலவென்றால், நீரே ஆலங்கட்டியாய் தரித்ததுபோலும், உருக்
கின நெய்யே கடின நெய்யானதுபோலவும், சமஸ்தமான ஐசுவரியங்களுக்
கும், பராக்கிரமங்களுக்கும், கீர்த்திகளுக்கும், அஷ்டலக்ஷ்மிகளுக்கும், ஞா
னத்திற்கும், வைராக்கியத்திற்கும் காரணராய் விளங்குகிற யாதொருபகவா
னுண்டோ அவரே மூடஜனங்க ளெளிதில் ஞானத்தைத் தெரிந்துகொள்ளும்
பொருட்டு மானைக்காட்டி மானைப்பிடிப்பதுபோல், மானிடதேகத்தை விளை

யாட்டினு லந்த பரமசிவனடைந்தார். அப்பரமசிவன் பாலபாவத்தையடைந்து பாலகிரீடையுடன் கூடினவராயிருந்து ஐந்துவயதுசென்றபின்னர் வித்தியாப்பியாசம் செய்து, பிறகு பிர்மசரியாச்சிரமமான முதலாவதாச்சிரமம்வகித்து அதின்பின்னர் வேதாத்தியயனங்களின் கரையை யடைந்தவராயும், சகலமான சாஸ்திரங்களையு மதினுண்மையையும் கற்றவராயும், உலகவிவகார ஞானங்களுணர்ந்தவராயும், வைதீக ஆசாரத்தையுடையவராயும், எப்பொழுதும் சந்தோஷமான மனதுடையவராயும், பிறருக்குப் போதிக்கிறதில் சமர்த்தராயும், ஆத்துமாராமராயும், அனவரதம்மௌனியாயும், குருவிசுவாசத்துடன்கூடிக்கொண்டிருக்கிற அந்த சிவனுனவர் இரண்டாவதான கிரகஸ்தாசிரமபாவத்தையடைந்து மூடர்கள்போல் இல்வாழ்க்கையிலிருந்து ராமலிங்கசாஸ்திரியென்னும் நாமகரணம்பூண்டு புத்திரர்களையுண்டுபண்ணியும், வேதத்தினர்த்தத்தை யுணர்ந்தவர்களாயும், லோககுருவாயுமிருக்கிற பகவத்பூச்சிய பாதாளான சங்கரதேசிகர்களால் செய்யப்பட்டிருக்கிற விவேகசூடாமணியென்கிற கிரந்தத்திற்கு தமிழ் மொழிபெயர்ப்பும், ஷை குருவா லியற்றப்பட்டிருக்கிற சர்வ வேதாந்த சித்தாந்த சாரசங்கிரகமென்கிற கிரந்தத்திற்குத் தமிழ் மொழிபெயர்ப்பும், வாஸுதேவயதியினுற்செய்யப்பட்டிருக்கிற தெக்ஷிணுமூர்த்திவீக்ஷா விலாசமென்கிற கிரந்தத்திற்கு தமிழ் மொழிபெயர்ப்பும், வித்தியாரண்ணிய மாமுனியினுற் செய்யப்பட்ட பஞ்சதசியென்கிற கிரந்தத்திற்குப் பதயோஜனி யென்கிற தமிழர்த்தமொழிபெயர்ப்பும், ஸ்ரீராமலிங்கசாஸ்திரியனென்கிற குருவானவருண்டுபண்ணி சுந்தரமுமனுன் தன்மூத்தமைந்தனுக்கு தன்பிர்மகுலம் விருத்தி யடையவேண்டி மேற்கூறிய புஸ்தகங்களைக் கொடுத்து,சுந்தரம் முதலான அனேகசிஷியகோடிகளுடன் தன்குடும்பத்திலெப்பொழுதும் பிர்மவிசாரம் செய்து அச்சிவனுன நம்மாசான் காலம்கழித்து நாடகத்தில் வேஷதாரிபோல் குடும்ப பாரத்தைவகித்து யெதார்த்தத்தில் சம்பந்தமற்றவராய் விளங்கினுர்.* மற்றிதர மாணுக்கர்க ளுய்யும்வண்ணம் தான்தானே வைராக்கியம் நிறைந்தவராயும், சாஸ்திரத்திற் சொன்ன சற்குணங்களுள்ளவராயுமிருக்கிற அசுவத்த யதீந்திர குருவை இத்துவாதசாந்த க்ஷேத்திரத்தில் குருவாய் தானே பாவனைசெய்தனர். அனேகசீடவர்க்கத்துடன் பிர்மநிஷ்டசிரேஷ்டரான அம்மகான் சிறிதுகாலம் சென்றபின்னர், (3) வதான வானப்பிரஸ்தாசிரமத்தை யடைந்து அனேகதேசங்களில் சஞ்சரித்து அங்கங்கிருக்கும் பக்தஜனங்களுக்கு தன்னுத்துமஞானத்தையருளி, அக்குருவானவர் நடேசன் விசுவநாதனென்ற பதஞ்சலி வியாக்கிரபாதமகரிஷிகளுக்குச் சமானமான யிந்த (2) சிஷியர்களுடனும் வேலைக்காரனுன சங்கரன் முதலானவர்களையும் கூட்டிக்கொண்டு மோக்ஷபூமியான வாரணுசியை யடைந்து விசுவநாதனையும், விசாலாக்ஷியையும், விஷ்ணுவையும், டுண்டிவிநாயகனையும், தெண்டபாணியையும், பைரவனையும், பாபநாசம்செய்கிற மகேசுவரனையும், காசியை

யும், சுத்தகங்கையையும், குகையையும், மணிகர்ணிகையும் விதிப்படி பூஜை செய்து, மறுபடியும் பிரயாகையை யடைந்து பிதிர்க்கள்முதலானவர்களுக்கு தர்ப்பணம் செய்து சந்தோஷ சித்தராய் சிறிதுகாலம் அவ்விடத்தில் வாசம் செய்தனர். மத்தியிலிருக்கிற அனேகக்ஷேத்திரங்களைத் தெரிசித்தும், தீர்த்தங்களாடியும், அங்கங்குள்ள மாணுக்கர்களுக் கனுக்கிரகம்செய்து அத்துவைதமார்க்கத்தையும் நிலை நிறுத்தி ஹாலாசிய க்ஷேத்திரம் வந்தடைந்தார். வைராக்கியத்துடன் நிறைந்தவராகி (4) நான்காவதான பரமஹம்சாசிரமம் பூண்டு பிர்மானந்தாசிரமி யென்னும் மகிமையான கீர்த்தியைப் பெற்று மதுராதேசத்திலிருக்கிற சிஷியவர்க்கங்களுடன்கூடி யம்முனிசிரேஷ்டர் நித்தியானித்தியவிவேகம் முதலான நான்குசாதனங்களின் சுவரூபத்தையும், சம்பந்தம், விஷயம், பிரயோசனம், அதிகாரிகளுடைய விவரணங்களையும், பழுதையிற் பாம்புபோல் ஜீவேசுவர ஜகத்து கற்பனையாய்த் தோன்றியிருக்கிற வத்தியாரோபக்கிரமத்தையும், அதினபவாதத்தையும், ஜாக்கிர சொப்பன சுழுப்திகளின் சுவரூபத்தையும், அவைகளில் ஆத்துமாசாக்ஷியாய் விளங்குந்தன்மையையும், மாயிகமலம், ஆணவமலம், காமியகமலங்களின் லக்ஷணங்களையும், அவைகளின்நாசத்தையும், ஈச ஜீவ ஜகத்பேதங்களின்சம்சாரத்தையும், காண்பான் காக்ஷி பொருளிவைகளின் லக்ஷணங்களையும், சஞ்சித, ஆகாமி, பிராரப்த கர்மங்களின் விசாரத்தையும், முக்தியடையு முபாயத்தையும், சுவர்க்கம், அந்தரிக்ஷம், பாதாளமென்கிற லோகங்களி லுண்டாகிற துக்கங்களையும், ரேசக பூரக கும்பகங்களி னப்பியாசத்தையும், ஜீவன் சம்சாரத்திற்கட்டுண்டு பெண், பணம், மைந்தன் முதலான விஷயங்களில் திரியும் விசேஷத்தையும், பூதப்பிரதிபந்தம், பவிஷியத்பிரதிபந்தம், வர்த்தமானப்பிரதிபந்தங்களின் குணங்களையும், சமஷ்டி வியஷ்டி பாவங்களையும், காரியகாரணங்களின் சுவரூபத்தையும், சென்றகாலம் நிகழ்காலம் வருங்காலங்களின் தன்மையும், மன்மதன் வல்லமையும், காலங்களுக் கப்புறப்பட்ட வஸ்துவின் லக்ஷணத்தையும், காமிகம் முதலிய ஆகமபேதங்களையும், ஸச்சிதானந்தலக்ஷணத்தையும், அஞ்ஞானம், ஆவரணம், விக்ஷேபம், பரோக்ஷம், அபரோக்ஷம், துக்கநிவர்த்தி, ஆனந்தாவாப்திகளின் விசேஷத்தையும், ஜீவத்தோற்றத்தையும், ஸ்தூல சூக்ஷ்ம காரணசரீர லக்ஷணங்களையும், ஆப்தம், அங்கம், ஸ்தானம், சத்பாவங்களென்ற நான்குவிதபணிவிடையின் விசேஷத்தையும், அன்பனுசான் சுவரூபங்களையும், அன்னமயப் பிராணமய மனோமய விஞ்ஞானமய ஆனந்தமய கோசங்களின் லக்ஷணத்தையும், அவைகளிலாத்துமா சாக்ஷியாய்ப் பிரகாசிக்குந்தன்மையையும், அறியாமை நான் எனது காமம் குரோதம் இவைகளான பஞ்சகிலேச சுவரூபங்களையும், தேகவாசனை, லோகவாசனை, சாஸ்திரவாசனைகளின் குணங்களையும், அவைகளின் நிவர்த்திரூபமான தத்துவஞான வாசனாக்ஷய மனோநாசங்களின் சுவரூபத்தையும், உபக்கிரம உபசம்மாரம் அப்பியா

சம் அபூர்வதை பலம் அர்த்தவாதம் திருஷ்டாந்தம் சொல்வது முதலான ஆறுவிதத்துடன் குருமுகமாய் விசாரம்செய்கிறதே சிரவணமென்றும், அதின் பின்னர் அச்சிரவணத்தையே தனித்திருந்துச் சிந்திப்பதே மனனமென்றும், அச்சிரவண மனனங்களினால் நிராக்ஷேபணையா யிருக்கிற பிர்மவஸ்துவில் தடையில்லாத சுவானுபவ பிரவாஹரூபமே நிதித்தியாசனமென்றும், தியானம் செய்தவன் தியானம் செய்த விருத்தி இந்த இரண்டுமற்று தியேயமாத்திரமான வஸ்துவில், காற்றில்லாதவிடத்தில் வைத்திருக்கிற தீபம்போல் சித்தமசைவற்றிருப்பதே சமாதியென்றும், பரோக்ஷ ஞானலக்ஷணமும், அபரோக்ஷ ஞானலக்ஷணமும். ருக்குவேதசம்பந்தமான ஐதரேயோபநிஷத்தின் முடிவான பிரஞ்ஞானம் பிர்மமென்றப்பியாசமகாவாக்கியார்த்தத்தையும், எஜுர் வேத சம்பந்தமான பிரஹதாரண்ணியோபநிஷத்தின முடிவான அஹம் பிர்மாஸ்மி என்றனுபவ மகாவாக்கியார்த்தத்தையும், சாமவேத சம்பந்தமான சாந்தோக்கியோபநிஷத்தின் முடிவான தத்துவமஸி யென்ற உபதேச மகாவாக்கியார்த்தத்தையும், அதர்வணவேதசம்பந்தமான நிருசிம்ம உத்தரதாபனீய உபநிஷத்தின் முடிவான அயமாத்துமா பிர்ம என்கிற சாக்ஷாத்கார மகாவாக்கியத்தி னர்த்தத்தையும், விட்ட லக்ஷணையும், விடாத லக்ஷணையும், விட்டுவிடாதலக்ஷணையினால் மாயாவித்தியாஜீவேசுவர வாச்சியங்களைத்தள்ளி லக்ஷியார்த்தமான பிர்மகூடஸ்தர்களுக்கு யேகபாவத்தையும், மகான்களால் சொல்லப்பட்டிருக்கிற அந்தர் திருசியானுவித்தம், அந்தர் சப்தானுவித்தம், பகிர் திருசியானுவித்நம், பகிர் சப்தானுவித்தம், சவிகற்பம், நிர்விகற்பம், இவ்வித ஆறுவித சமாதிகளின் லக்ஷணத்தையும், அவைகளின் சுவானுபவத்தையும், பிந்து, பிந்துஜாக்கிரம், மகாஜாக்கிரம், ஜாக்கிரசொப்பனம், சொப்பனம், சொப்பனஜாக்கிரம், சுஷுப்தியென்றஞ்ஞானபூமிகளின் லக்ஷணத்தையும், சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தாபாவனை, துரியமென்ற ஞானபூமிகளின் மகிமையும், அவைகளின் விசேஷணங்களையும், கடாகாச மகாகாச ஜலாகாச மேகாகாச சுவரூபங்களையும், அவைகளின் தன்மையான கூடஸ்த பிர்ம ஜீவ ஈசுவரபாவங்களையும், துவைத விருத்தி, சாக்ஷிவிருத்தி, அகண்டாகாரவிருத்தி, அகண்டைகரசவிருத்தி, இவைகளின் தர்மங்களையும், அஞ்ஞான சந்தேக விபரீதபாவங்களின் லக்ஷணத்தையும், அவைகளின் நிவர்த்திக் குபாயத்தையும், மகாகர்த்தா, மகாபோக்தா, மகாத்தியாகியான ஜீவன்முக்தர்களின் விசேஷணங்களையும், மாயாவித்தியாசுவரூபத்தையும், ஆகாசாதி பஞ்சபூதசுவரூபத்தையும், ஜீவன்முக்தி லக்ஷணத்தையும், விதேகமுக்தி லக்ஷணத்தையும், ரூபநாசத்தையும், அரூபநாசத்தையும், பாதாதிருஷ்டியும், சொப்பன திருஷ்டியும், மித்தியாதிருஷ்டியும், தன்மயதிருஷ்டியும், லக்ஷணவாக்கியத்தையும், சுவானுபூதிவாக்கியத்தையும், குருவால் சொல்லப்படுகிற உபதேசவாக்கியத்தையும், சாக்ஷாத்காரவாக்

கிபத்தையும், பிரத்தியக்ஷம் முதலிய எண்விதப்பிரமாணங்களையும், பிரத்திய காத்தும பரமாத்தும ஐக்கியத்தையும், பிரவர்த்தியின் மகிமையும், ஜாபாலம் முதலான உபநிஷத்தில் சொல்லும் குடீசகாதி நான்குவித சன்னியாசத்தை யும், ரிபுமுதலான பரமஹம்சர்களின் வைபவங்களையும், லோகாயதன் முத ல் சாங்கியனீறா யிருக்கிற ஜீவப்பிராந்தர்களின் லக்ஷணத்தையும் துரும்பை பூஜிக்கிரவன் முதல் ஈசுவர பூஜகனீறாயிருக்கிற ஈசுவரப்பிராந்தர்களையும், கா மிகாதி ஆசிருதர்களையும், சம்சார சக்கரத்தின் மயக்கத்தையும், அதின் நிவிர் த்தியைச் செய்யும் மேலான ஞானோபாயத்தையும், இவை முதலான அனேக கிரமங்களையும், தூங்கி விழித்தது முதல் மறுபடியும் தூங்கும் வரை அடிக்க டி நம் குருவானவர் தினந்தோறும் அன்பான சிடருக் கனுக்கிரகம்செய் துப தேசித்து வந்தனர். கந்தர்வ நகர் போலவும், கிளிஞ்சி வெள்ளி போலவும், கானல் நீர் போலவும், கனவூர் போலவும், வானமை போலவும், கயற்றிற் பா ம்பு போலவும், மலடிசேய் போலவும், தரிபு மான் போலவும், முயலின் கோ டு போலவும், மனிதக் கொம்பு போலவும், இச்சகத்தானது சுத்தப் பொய்யெ ன்று இவை முதலிய திஷ்டாந்தங்களாலே அனுதினமும், அய்யனருளிச் செ ய்தனர், மாணுக்கர்களுக்கு பக்தி விர்த்தியின் நிமித்தம் தானும் தன் குரு வான அசுவத்தேசயதீந்திரரை பூஜை செய்து, தன் சுபானுபவ நிச்சயத்தால் லோகோபகாரமாய், துரீயாதீதா சிரமமடைந்து வேத முடிவின் ரகசியார்த்த ங்களை வஞ்சனையற்று சுவானுபூதியையும், சொப்பன திருஷ்டியும், அனைவர தம் அன்புடனறைந்தனர், சரீரத்துடன் கூடினவராயிருந்தாலும், அசரீர ராயும், விகாரியாய்த் தோற்றினாலும், நிர்விகாரியாயும், சாக்ஷியாயிருக்கிற சி வத்தில் அமைதி பெற்றனர். கணக்கற்ற மாணுக்கர்களுடன் கூடியவர்களுக் கு குருபாவத்தையும், தானடைந்து பிர்மானந்தத்தில் மூழ்கி பேச்சற்ற நிலை யில், அவ்வன்பர்களையும் அமைந்திருக்கும்படி செய்து எவர்கள் பிர்மானந்த சிட்ர்களோ அவர்களை ஜீவன் முக்தர்களாகச் செய்து யிவ்வுலகில் மேலான கீர்த்தியை நம்மாசானடைந்தனர். அவ்வைபவத்தை, ஞானநோக்காலுணர் ந்த நாரதமுனிவர் பூலோகமடைந்து நமதய்யனை யீசனை வணங்கி துதிக்கி ன்றனர். தேவாதி தேவனே போற்றி, கருணாகரனே போற்றி, ஸச்சிதானந் த ரூபனே போற்றி, பூர்ணவானே போற்றி, பிர்மபாவனனே போற்றி, முனி கள் பூஜிதனே போற்றி, அன்பர்கள் மனவாசனே போற்றி, குருநாதனேபோ ற்றி; ஞானபாரகனே போற்றி, போதகப்பிரியனே போற்றி, ஞானிகள்வரனே போற்றி, யென்றிவ்விதம் வேதஸ்தோத்திரங்களினால் முறையிட்டனர். பின் னர் அக்குருவினேகாந்தஞ் சென்று தபோதனரான நாரதமகாரிஷியானவர், ஏ, அய்யனே யாதுபற்றி யிவ்விடம் யெழுந்தருளினீரோ, அக்காரியம் முடி வு பெற்றது, துவாதசாந்த வாசிகளான என்னுடன் பிறந்தோர், தங்களனுக் கிரகத்தால் ஜீவன் முக்தர்களானார்களிதிற் சற்றேனும் ஐயமில்லை அண்ணலே,

இனி இம்மானிடவேடம் விடுத்து தங்கள் வாசஸ்தலமான கைலையங் கிரிமே
வி பூர்வ ரூபமான ஈசுவரவடிவத்தை யடைவீராகவென யிவ்வாறோதினர்.
இம்முறையைக் கேட்ட அவ்வீசன்புன் சிரிப்புடன் கூடினவராகி, முன்னிந்த
கலியுகத்தில் உன்வேண்டுகோளின்படி சங்கராசாரியரென்றும் நாமம்பூண்டு
காணாபத்தியம்முதலான ஆறுமதவாதிகளையுங்கண்டித்து, இக்கலியில், அத்து
வைதமதஸ்தாபனஞ்செய்து, முன்னிந்த நீலகண்டபரமேசுவரனென்னு மா
த்துமலிங்கத்தில்யான் முன்னெப்படி அந்தர்த்தானம் செய்தேனோ, அவ்விதமி
னிச்செய்கின்றேனென்று, பிரமகுமாரனான நாரதரைநோக்கிக்கூறினர். இம்
மொழியை யுணர்ந்த விதிமைந்தனும் தனதிருப்பிடமேகினர். நமதாசான் பிர்
மானந்ததேசிகன் நாரதனுக்குரைத்தவாக்கிய முணர்ந்து சலனமற்றபவனன்
போல் ஜீவன்முக்திவிரதத்தைவிட்டு, அத்தேவன் விதேகமுக்தி பாவமடைந்த
னர். பக்தர்களின் பீடைகளைப்போக்கடிக்கத்தக்கவராயும், ஸச்சிதானந்தரூப
னாயும் பிர்மரூபனாயும் லோகானுக்கிரகமூர்த்தியாயும், லக்ஷுமிநாயகனுக்கு தி
கப்பியராயும், சுவயம் பிரகாசராயுமிருக்கிற அம்மகாதேவரான பிர்மானந்த
தேசிகன் துன்முகிவருடம் சித்திரைமாதம் சுக்கிலபக்ஷத்துவாதசிசுக்கிரவாரம்
உத்திர நக்ஷத்திரமும்கூடின சுபதினத்தில் பிர்ம முகூர்த்தத்தில் விதேககை
வல்லியமேகினர். இந்திரன் தேவகோடிகள் நாரதர்முதலான ரிஷிக்கூட்டங்க
ளால் ஸ்தோத்திரிக்கப்பட்ட பாதாரவிந்தங்களுடன்கூடின அக்கருணைக்கட
லானவீசன் மேற்கூறிய ஜோதிர் லிங்கத்தில் சமுத்திரத்தில் அலை லீனமாவது
போல் லீனமடைந்தனர், கர்பூரஜோதிபோல் நிர்விகற்பவஸ்துவில் ஐக்கியமா
யினர். உலையிரும்புண்டநீர்போல் அச்சூக்ஷுமதேகம் சிவசுவரூபத்தில் அடங்
கிற்று. அம்மகாத்துமாவினுடைய ஆத்தும ஞானவிசேஷத்தையும், சிரேஷ்ட
மான அபரோக்ஷ ஞானசாமர்த்தியத்தையும் யுக்திசாரங்களுடன் நிறைந்தசுவா
னுபவவினோதத்தையும் தேவசிரேஷ்டனான ஆதிசேடனைத்தவிர யெவன்சொ
ல்ல இவ்வுலகில் வல்லவனவன் அவ்வாதிசேடனும் பிர்மானந்த மகாமௌ
னிவைபவத்தை முன்ஞானநோக்காலுணர்ந்ததினாலன்றோ இரண்டாயிரம்நா
வையுடைய நம்மால்சொல்ல முடியாதென்று கருதியன்னிமித்தமே பாதாள
லோகமப்பவேயடைந்தனன். அவ்வபாரகருணாமூர்த்தியின் வைபவத்தையிப்பு
வியில் யானுரைக்கத்தகமையுளனோ அப்படியாயினும் பிர்மானந்தாவிர்ப்பாவ
முதலைக்கிய மீறாயுள்ள திவ்வியபிர்சரித்திரத்தை யக்குருநாதன் கிருபாவசு
த்தால்அற்பபுத்தியுடன்கூடியயான் ஒருவாறறைய லுற்றேன். சர்வசங்கடங்களை
யும் போக்கடிக்கக் கூடியதாயுமிருக்கிற அத்திவ்விய சரித்திரம் ஸ்ரீராமலிங்
கவிஜயமென்றும், நாமகரணம் பூண்டு இப்பாரில் குருநாதன் தயாநோக்கால்
ஸர்வோத்கருஷமான கீர்த்தியை யடையட்டும். அசுவத்தயதீந்திர தேசிககு
ருகிருபாவசத்தால் பிர்மஞானிகள் திருப்தியையடையும் பொருட்டும், சகல
மான அதிகாரிகள் துதிக்கும் பொருட்டும்சம்சாரசாகரத்தில் மூழ்கினவரை

கரையேற்றிவைக்கும் பொருட்டும், நம்குருப்பிரீதியின் பொருட்டும், இத்திவ்விய ராமலிங்கவிஜய சரித்திரமானது அவர்முக்கிய சீடனானேயென்னால் நன்றாயுரைக்கப்பட்டது. அச்சரிதைக் கொப்புயர்வு இவ்வுலகிலில்லை அதிற் சற்றேனுமையமுறற்க. குருபத்தியுடன் கூடினவர்களாயும் வேதவேதாங்களின்கறை கண்டவர்களாயும், சிரவணாதிதர்மங்கள் பூர்ணமாயடைந்தவர்களாயும், பிர்ம ஞான முணர்ந்தவர்களாயும், கோபமாகிற வியாதியற்றவர்களாயும், நமக்கு சமானமாயிருக்கக் கூடாதென்ற மாத்ஸரியகுணங்களற்றவர்களாயும், தன்பிர்ம பிரயோஜனமே மேலென்று கருதினவர்களாயு மிருக்கிறம காங்களான வர்கள் இந்த திவ்விய விஜயத்தை பார்வையிட்டுச்சந்தோஷிக்கக்கடவர்கள். இச்சரிதையையன்புடன் படித்தவர்களும் கேட்டவர்களும் மோக்ஷமடைவதற் கையமில்லை. குருமுதலியயனைவருக்கும் மங்களம் செய்து சாஸ்திரத்தை முடித்தனம்.

ஸ்ரீராமலிங்கவிஜயம் முற்றிற்று.

---

[illegible]

இந்நூலாசிரியராகிய வித்தியாரண்ணியமுனீசுவரர்கள், வேதார்த்தங்களையும், உபநிஷதர்த்தங்களையும், வெளியிடவிரும்பி, தாபனீய உபநிஷத்தில் தெரிவித்திருக்கிற சச்சிதானந்தபதங்களின், தாற்பரியத்தை அனைவரும் எளிதில் அறிந்து, சம்சாரசமுத்திரத்திலிருந்து கரையேறி, நித்தியதிருப்தர்களாய் வாழக்கடவர்களென்று, அறிந்த அம்மகாத்துமா (சத்) என்ற சப்தார்த்தத்திற்கு, விவேகபஞ்சகத்தையும், (சித்து) என்ற பதத்தினர்த்தத்திற்கு, தீபிகாபஞ்சகத்தையும், (ஆனந்தம்) என்ற பதத்தினர்த்தத்திற்கு, ஆனந்தபஞ்சகத்தையும், ஒன்றுசேர்த்து (பஞ்சதசி) என்கிற (15) ந்து பிரகரணத்தில், (1) வது பிரகரணமான பிரத்தியக் தத்துவவிவேகத்தை உரைக்கின்றார்.

இந்தப் பிரகரணமானது, வேதாந்தப் பிரகரணமானபடியினால், முதல் முதல் அனுபந்தசதுஷ்டயமென்கிற, நான்குலட்சணம் தெரிவித்ததின்பிறகே சாஸ்திரம் ஆரம்பிக்கவேண்டியதென்று பெரியோர்களின் சம்மதப்பிரகாரம், அந்நான்கையும் இந்நூலாசிரியர் (1-2) சுலோகங்களினால் வெளியிட்டனர். எவ்விதம் வெளியிட்டனரெனில், முதல் சுலோகம் பூர்வார்த்த உத்தரார்த்தத்தால் குருவணக்கம் தெரிவித்ததின்மேல் முறையிட்ட அனுபந்தசதுஷ்டயத்தில், துக்கநிவர்த்தி, ஆனந்தாவாப்திரூபமான பிரயோசனமென்ற (1) வது லட்சணமும், கூடஸ்தபிரமைக்கியரூபமான விஷயமென்கிற (2) வது லட்சணமும், (2) வது சுலோகம் பூர்வார்த்தத்தில் குருவுக்கும், சிஷியனுக்கும், சாஸ்திரத்திற்கும், பிரமத்திற்கும், ஐக்கியரூபமான (3) வது லட்சணமும், நித்தியாநித்தியவிவேகம், இகாமுத்திரார்த்தபலபோகவிராகம், சமாதிஷட்கம், முமுட்சுத்துவமென்கிற, அதிகாரரூபமான (4) வது லட்சணமும் சொன்னதாய்க் கருதி, தன் குருவான சங்கரானந்தசுவாமிகளின் பாதகமலங்கள், ஜீவேசுவரஜகத் காரியங்களோடே கூடிக்கொண்டிருக்கிற மகா மோகரூபமான மூலாஞானமாகிற முதலையை விழுங்குகிறதில் முக்கியமான வியாபாரத்தையுடையதாயும், சகலசம்பத்துக்கள்நிறைந்த ஸ்ரீ சங்கரானந்தகுரு பாதகமலங்களின் பொருட்டு வந்தனம்கூறி, அக்கமலங்களைப் பூஜித்து, நிர்மலமான மனதையுடையவர்களுக்கு, இப் பிரத்தியக் தத்துவவிவேகமென்கிற முதலாவதுபிரகரணம் கூறுகின்றனர். (35) ந்து தத்துவத்தோடே கூடியிருக்கின்ற ஜாக்கிராவஸ்தையில் சப்தாதிவிஷயங்கள் நானாவாயும், அவைகளையறிந்த அறிவு ஒன்றாயும், அவ்விதமே (24) தத்துவத்துடன் கலந்த சொப்பனாவஸ்தைகள் பலவாயும், அதை யறிந்த அறிவு ஒன்றாயும், ஜாக்கிர சொப்பனங்கள் ஸ்திரா ஸ்திர பேதங்களுடன் கலந்தனவன்றி, வேறு விசேஷமொன்றில்லையென்று விரித்துக் காட்டினர். அவ்வொழுங்காய் (4) தத்துவங்களுடன் கூடின சுஷுப்தியவஸ்தையில், அஞ்ஞானவிஷயத்தையும் அறிந்த அறிவு ஏகமாயும், அஞ்ஞானவிஷயத்தால், தானான அறிவு, அறியப்படாததாயும், சுஷுப்திகாலத்திலிருந்த அறிவினனுபவம், அச்சுஷுப்திவிட் டெழுந்தோ

னுக்கு, இதுகாலம்வரையில் ஒன்றும் தெரியாமற் சுகமாய்த் தூங்கினேனென்கிற அஞ்ஞானனுபவமும், அறிவின் ஏகத்தன்மையும், தினம் ஒரேபடித்தாய் எல்லாஜீவர்களுக்கும் அபேதமாய் அறியப்படுகிறபடியால், மூன்றவஸ்தைகளிலும் காண்கின்ற அறிவு ஒன்றென்று தீர்மானம் செய்யப்பட்டது. அம்முறையே மறு தினத்திலும், மறு பக்ஷங்களிலும், மறு மாசங்களிலும், மறு வருஷங்களிலும், மறுயுகங்களிலும், மறுகற்பங்களிலும் அறிவு ஒன்றென்று யுக்தியினல் சத்வஸ்துவின் சொரூபம் சாதித்தனர். அவ்வாறு எந்த அறிவானது உதயமும், நாசமுமற்ற சுவப்பிரகாசவடிவமோ, அதுவே சித்வஸ்துவின் சுவரூபம். லோகத்தில் மனைவிமுதலான சகலமானவஸ்துக்களில் வைக்கும் பிரியம் யாதோ, அதுவே ஆனந்தவஸ்துவின்சொரூபம். ஒருபிராணிக்காவது நாமெப்போதும் மறிக்கக்கூடாது, சிரஞ்சீவியாயிருக்கவேண்டுமென்கிற அதிகப் பிரியமானது தானன அறிவினிடத்தில், எக்காலும் பார்க்கப்பட்டு தன் சுகத்திற் கனுகுணமாயிருக்கிற பதார்த்தத்தில் பிரியமும், அதற்கு விருத்தம் செய்கிற ஜீவர்களிடத்தில் கோபமு முண்டாய், சர்வானுபவசித்தமான அதிகப் பிரியமானது இந்த அறிவினிடத்தில் பார்க்கப்படுகின்றது. அவ்வித வேதுவால், தானே, ஆனந்தசொரூபனென்று அறைந்தனர். இவ்விதமுரைத்த ஆசானை வணங்கி, என் அண்ணலே, தாம், சச்சிதானந்தபதங்களுக்கு ஒன்ருயிருக்கும் தன்மையை தன்னுவினல் யுக்தியாலுரைத்ததன்றி, வேறு சுருதி பிரமாணம் யான் கண்டிலேன். அஃது யானறியும்வண்ணம் அன்புடனருள்வாயாகவென, ஆனந்தபாஷ்பமலரினலருச்சித்த அன்பனைநோக்கி யையனருளிகின்றனர். எமதன்புடை மைந்தா கேளாய், நீகேட்டவினவுக்கு சகல உபநிடதமும், வேதங்களும் கூறினதையாணிங்கருளிச்செய்கின்றனம், சாந்தோக்கிய உபநிஷத்திலும், கைவல்லியோபநிஷத்திலும், இன்னும் மற்றுமுள்ள சுருதிகளிலும் தத்துவம் பதார்த்தரான கூடஸ்தரே லக்ஷியார்த்தரொன்றும், சச்சிதானந்தரூபரொன்றும், அவரே நித்தியரொன்றும் கூறுகின்ற சுருதியினர்த்தத்தை மனதில் நிச்சயித்தும் மேல் அனேகவிடங்களில் சுருதியின் தாற்பரியத்தையே நன்ருய் வெளியிடப்போகிறபடியால், இங்கு சுருக்கிக் கூறினம். நீர்சொன்னபடியிருக்கட்டும், ஆத்துமா பரமானந்தரூபரொன்று கூறினதில் நான் ஆக்ஷேபணைசெய்கிறேன், அதாவது, தங்களால் சொல்லப்பட்ட ஆத்துமா விளங்குகிருரா, அல்லது, விளங்கவில்லையாவென்று ஆக்ஷேபணைசெய்து விளங்கும்பட்சத்தில், அழிந்துபோகிறதாயும், அற்பமாயு மிருக்கிற விஷயசுகத்திலாசைவரமாட்டாதே, விளங்காததாயிருக்கும்பட்சத்தில் பரமானந்தசொரூபம்கெட்டுப்போய்விடுமே, இதற்கென்னசமாதானம்கூறுகின்றீரெனக் கேட்ட அன்பனுக் கனுக்கிரகம் செய்கின்றனர். ஏ அன்பா, இவ்வாத்துமசொரூபம் விளங்கியும் விளங்காமையுமா யிருக்கின்றது. அக்காரணத்தால் பரமானந்தரூபம் விளங்கவில்லை. அது எதுபோலவெனில், தன்பிள்ளையும்,

அத்தியயனம் செய்கிற அனேகம் பிள்ளைகளுடைய கூட்டத்திலிருந்து வேதாத்தியயனம் செய்கிற குரல் விளங்கியும் விளங்காமையா யிருப்பதுபோல இவ்வறிவும் விளங்கியும், விளங்காமையாயு மிருக்கின்றது. அவ்வேதுபற்றியாம் பரமானந்தசொரூபமெனக் கூறினம். அதை விரித்துரைக்கின்றனர், திருஷ்டாந்தத்தில் மைந்தன் குரலறியாமைக்கு அம்மாணுக்கர்கள் பிரதிபந்தமாயிருப்பதுபோ லிவ்விடத்தில் வஸ்துவில்லை, வஸ்துவிளங்கவில்லையென்கிற ரூபமாயிருக்கிற ஆவரணசக்தியே பிரதிபந்தகமாயிருந்து வஸ்துவில்லை வஸ்து விளங்கவில்லையென்ற அனுபவரூபமாய் மறைப்பதே மேலான பிரதிபந்தகமென்று இங்ஙனம் முறையிட்டனம். அவ்வாவரணசக்திக்குக் காரணமான மூலப்பிரகிருதியைத் தெரிவிக்கின்றனர். இவ்விடத்தில், அனாதியா யிருக்கிற மகாமாயையே மூலப் பிரகிருதியென்றும், அது பிரம பிரதிபலனத்துடன் கூடியிருக்கிறதென்றும், சத்துவ ரஜஸ்தமோகுணங்களுடன்சேர்ந்திருக்கின்றனவென்றும், சுத்தசத்துவகுணமான மாயையிற் பிரதிபிம்பித்த ஈசுவரன் அம்மாயையைச் சுவாதீனம்செய்து சர்வஞ்ஞனும், சர்வேசுவரனும், சர்வசக்திமானும், அதைத்தானே சமஷ்டிகாரணசரீரமாய் அபிமானித்து விளங்குகின்றனர். அவ்விரஜோகுணமான மலினசத்துவ அவித்தையில் பிரதிபலித்து, அவ்வவித்தை வெகுவிதமாயிருப்பதால் அதிற்பிரதிபலித்த ஜீவர்கள் அனேகர்களாகவிருந்து அவ்வவித்தியாசுவாதீனர்களாய் வியஷ்டியான அக்காரணசரீரத்திலேயே அபிமானியாய், பிராஞ்ஞன் என்ற நாமம்பூண்டு விளங்குகின்றனர். மீதியான அத்தமோகுணத்தை பிராஞ்ஞர்களின் போகானுபவத்திற்காக அவ்வீசன், ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பூமி, இப்பஞ்சபூதங்களைச் சிருஷ்டித்தனர். அக்காரணகுணம் ஐம்பூதங்களிலும் கலந்திருத்தல்பற்றி, சத்துவகுணவியஷ்டியில் சுரோத்திராதி ஞானகருவிகளைந்தும், சத்துவகுணசமஷ்டியில் மனம் புத்தி யிரண்டும், ரஜோகுணவியஷ்டியில் வாக்காதி தொழிற்கருவிகளைந்தும், ரஜோகுணசமஷ்டியில் பிராணாதிபஞ்சவாயுக்களுமுண்டாய் இப்பதினேழும் சேர்ந்து சூக்ஷுமசரீரமென்றும், அவ்வியஷ்டி சூக்ஷுமசரீரத்தில் அப்பிராஞ்ஞனை ஜீவன் தைஜசனென்றும் பேசைவகித்தும், அவ்வீசன் அச்சமஷ்டி சூக்ஷுமசரீரத்தில் இரணியகருப்பனென்றும் நாமம்பூண்டு விளங்குகின்றனர். அச்சீவர்களின் போகபலானுபவத்திற்கேதுவாய் அவ்வீசன் அவ்வைம்பூதங்களையும் மீதியான தமோகுணத்தால் பஞ்சீகரணம் செய்தனர். பஞ்சீகரணமாவன, அவ்வாகாசாதி யைம்பூதங்களை ஒவ்வொன்றையும் இரண்டாகச் செய்து அவ்வொவ்வொன்றை நான்காக்கி, அந்நான்கை அவ்விதரபூதங்களுடன் சேர்த்து ஒருமித்து (இத்தூலசரீரத்தை யிவ்விதம்) பஞ்சீகரணம் செய்தனர், அதின்பின்னர் அச்சமஷ்டி ஸ்தூலவுடலில் அவ்விரணியகர்ப்பர், அபிமானிக்குங்காலையில் விராட்டென்ற நாமம்பூண்டனர். இவ்வியஷ்டி ஸ்தூலவுடலில் அத் தைஜசன் அபிமானிக்

கும் சமயத்தில் விசுவனென்றும் பேரையடைந்து விளங்குகின்றனன். அவைகளிலிருந்து அண்டமும், ஈரேழுலோகங்களும் போக்கியவஸ்துக்களும் போகலட்சணங்களும், ஜராயு ஜாதி நான்குவிதசரீரங்களும், அவைகளுணவும் ஈசன் உண்டுபண்ணினர். அச்சீவர்கள் புண்ணியமிசிரபாபகர்மத்தால் தேவமனிதத் திரியக்காதி சரீரங்களையடைந்து வெளிதிருஷ்டியான விஷயநோக்கமுள்ளவர்களாய், அந்தரங்கமான ஆத்துமதத்துவஞானத்தை ஒருக்காலுமறியாதவர்களாய், உண்டதே உறுதி, கண்டதே காக்ஷியென்றுநினைத்து சதாதுக்கிகளாய் கர்மம்செய்து போகமருந்தி காமிகளாய் மூடர்கள் விளங்குகின்றனர். நதியிற் சுழியில்விழுந்து அவஸ்தையுறும் புழுப்போல சுகமற்றதாயிருக்குங்காலே முன்ஜனனத்திற்செய்த தவத்தால் தயாளுவான புருஷன் அந்நதிக்கரையை யடைந்து, அப்புழுவையெடுத்து அத்தீர மரத்தினடியில் வைத்து, அதுசுகிப்பதுபோல், இச்சீவர்களும் பிரவிக்கடலிலமிழ்ந்து, அனேகசரீரங்களாகிற சுழியில்வீழ்ந்து துக்கிகளாய் வருந்துங்காலே யிச்சீவர்கள் முற்பிறப்பிற்செய்த சற்கருமபுண்ணியவிசேஷத்தால் மகாதயாளுவாயும், வேதசாஸ்திரங் கற்றவராயும், தத்துவசொரூபத்தை நன்றாய்க் கரைகண்டவராயும், பிர்மவித்தாயுமிருக்கிற ஆசாரியரால் இம்மாணுக்கர்கள் பஞ்சகோச விவேகத்தால் மேலான மோக்ஷசுகத்தை அடையவேண்டியதுதான் ஜன்மமெடுத்தபலனென்று கூறினர். இவ்விதமறைந்த அம்மொழியைக் கேட்டவன் பின், இருதாள்வணங்கி, என்தெய்வமே, பஞ்சகோசத்தின் ஸ்வரூபத்தையும், அதையடைந்து அதின்வழியாய் ஜீவாத்துமா பந்தப்பட்டிருப்பதையும் அதினிவர்த்தியும் அனுக்கிரகிக்கவேண்டுமென்று சொன்ன மொழியைச் செவியுற்ற ஆசானவர் மறுபடியும் கூறுகின்றனர். பஞ்சீகரணபூதத்திலுண்டான அன்னமயரூபமென்ன, வாக்காதீந்திரியமும், பிராணனும்சேர்ந்த பிராணமயரூபமென்ன, ஞானேந்திரியத்தோடேகூடின மனோமயரூபமென்ன, அவ்விந்திரியங்களுடன்கூடின விஞ்ஞானமயரூபமென்ன, பிரிய, மோத, பிரமோதாதிவிருத்தியுடன்கூடின ஆனந்தமயரூபமென்ன, இவ்வைங்கோசங்களில் ஆத்துமா, அத்தியாசத்தையடைந்து அந்தந்தகோசங்களின் தன்மையில் மூழ்கித் தன்னுடைய சச்சிதானந்த ஸ்வரூபத்தை மறந்தவராய், பெருத்தே னிளைத்தேனென்று அன்னமயகோசாத்தியாசத்தையும், பசிதாகத்துடன் கூடினபிராணமயகோசாத்தியாசத்தையும், சங்கற்ப விகற்பம் செய்தேனென்ற மனோமயகோசாத்தியாசத்தையும், கருத்தாவான விஞ்ஞானமயகோசாத்தியாசத்தையும், நான் போக்தாவென்ற ஆனந்தமயாத்தியாசத்தையும் அடைந்து அந்தந்த கோசரூபனாய் சம்சாரத்தில் மூழ்கிக்கிடக்கின்றார். இவரை அன்வய வியதிரேகயுக்தியான பஞ்சகோசவிவேகத்தால் பிரித்தறிந்து சம்சார சமுத்திரத்திலிருந்து கரையேற்றி மேலான பிரமஸ்வரூபத்தை அடையும்படி செய்யவேண்டியது. அன்வயவியதிரேகலட்சணங்கூறல், ஸ்தூலசரீரம்தோன்

ரூத சொப்பனுவஸ்தையில் ஆத்துமாவாகிய தான் தோன்றுகிறதே அன்வயம் இத்தூலவுடல் தோன்ருமையே வியதிரேகம். அவ்வாறு சூக்குமசரீரம் தோன்ருத சுஷுப்தியில் தான் தோன்றுகிறதே அன்வயம். இச்சூக்குமவுடல்தோன்ருமையே வியதிரேகம். இது வியதிரேகத்தால் பிராணுதி மூன்று கோசங்களும் நேதிசெய்ததாய் ஆய்விட்டது. அவ்விதமாய் சுழுப்திதோன்ருத நிர்விகற்பசமாதியில் தான் தோன்றுகிறதே அன்வயம். தான் தோன்றினும் இக்காரணவுடல் தோன்ருமையே வியதிரேகம். ஆற்றங்கரையிலிருக்கிற நாணலின் மேல் இதழ்களைக் களைந்து, நடுக்கதிரைக் கொள்வதுபோல், இப் பஞ்சகோசங்களாகிற மேல் இதழ்களை மேற்சொன்ன அன்வய வியதிரேக யுக்தியால் அத்தியாசத்தைக் களைந்து, ஹிருதயமாயிருக்கிற நடுவில் விளங்குகின்ற சச்சிதானந்தஸ்வரூபமான தத்துவம்பதலக்ஷியார்த்த பிரம ஸ்வரூபத்தை பிரித்தறிந்தவன் பிர்மமாயாவன். இம்மொழியினுலே கூடஸ்த பிரமங்களுக்கைக்கியமானது யுக்தியால் சம்பவித்திருக்கிறது. அவ்விதமே சாந்தோக்கிய உபநிஷத்து ஆருவதத்தியாயத்தில் சுவேதகேதுவான தன்மைந்தனுக்கு, உத்தாலகமகரிஷியானவர் உபதேசவாக்கியமென்கிற (3) வதான (தத்துவமசி) மகாவாக்கியத்தால் அனுக்கிரகம்செய்து, விட்டுவிடாதலட்சணையினுல் லக்ஷியார்த்தத்தைக் காண்பித்திருக்கிற மகாவாக்கியார்த்தத்தின் தாற்பரியத்தை பின்நூலாசான் இங்கு விரித்துரைக்கின்றனர். யாதொரு பிர்மமானது தமோகுணமான மாயையைக் கிரகித்து ஜகத்துக் குபாதானமாயும், சுத்தசத்துவமான மாயையைக் கிரகித்து, ஜகத்திற்கு நிமித்தகாரணமாயுமிருக்கிற பிரமம் (தத்) என்கிறபதத்தினுல் சொல்லப்படுகின்றது. அப்பிரமமே எப்போ, காமகர்மாதிகளுடன்கூடின ரஜோகுணமான மலினசத்துவத்தை கிரகிந்தாரோ அப்போ (துவம்) என்ற பதத்தினுல் சொல்லப்படுகின்றது. மூன்றுகளும் ஒன்றுக்கொன்று விரோதங்களாயிருப்பதால் அவைகளைத் தள்ளி, பூரணமாயும், சச்சிதானந்தமாயுமிருக்கிற பிரமத்தை (தத்துவமசி) மகாவாக்கியத்தினுல் லக்ஷியார்த்தமாக விளக்கிவைக்கின்ருர். அவனே இந்த (தேவதத்தன்) என்கிற வாக்கியத்தில் அவனிவன் என்கிற வாக்கியத்தைத் தள்ளி, விட்டுவிடாத லக்ஷணையால் தேவதத்தன் ஒருவனென்று அறிவதுபோல, இங்கும், ஜீவேசுவரர்களுக் குபாதியான, அவித்தியா மாயைகளைத் தள்ளி, அகண்டசச்சிதானந்த தத்பத லக்ஷியார்த்தமான பிரமத்திற்கும், சச்சிதானந்தத் துவம்பத கூடஸ்தருக்கும், பாகத்தியாகலக்ஷணையினுல் (அசி) என்றபதம் ஐக்கியம் செய்கின்றது. நீர்சொன்ன லக்ஷியத்தன்மை, சவிகற்பவஸ்துவிற்கா, அல்லது, நிர்விகற்பவஸ்துவிற்காவென்று சீடன், ஆக்ஷேபணைசெய்து, இரண்டாவதாக்ஷேபரூபமான நிர்விகற்பவஸ்துவுக்கு லக்ஷியத்தன்மை யொருக்காலும் பார்க்கமுடியாது, ஓரிடத்திலும் சம்பவிக்கவுமாட்டாதென் றிவ்விதமுறைத்த சிஷியனை நோக்கி, குரு அவனையே கேழ்க்கிருர். நீசெய்த இந்த

ஆக்ஷேபணையானது, நிர்விகற்பவஸ்துவிற்கா, அல்லது, சவிகற்பவஸ்துவிற்கா, சொல், முதல்பக்ஷத்திற்கு, உன்னாலே, கூடாதென்றாக்ஷேபணை சொல்லிவிட்டாய், இரண்டாவதுபக்ஷத்திற்கென்றுரைப்பையேயானால், விவஸ்தையில்லாத அனவஸ்தாதோஷமும், அனேகாத்துமாகாரணமென்ற ஆத்துமாசிரய தோஷமும், வண்டிச்சக்கிரம்போல், எப்போதும் சுற்றிக்கொண்டிருக்கிற சக்கிரகாப்திமுதலான இன்னுமனேகதோஷங்கள்வந்துசேரும். இவ் விசேஷங்கள் இதரசாஸ்திரங்களில் விரிவாய் காணப்படுகின்றன. அவ்வேதுவைப்பற்றியும், கிரந்தம் விரிவாகுமென்றகருத்தைப்பற்றியும், இந்நூலாசான் சுருக்கியுரைத்தனர். நீசெய்தவிகற்பங்களிலும், அவைகளினபாவங்களிலும் சம்பந்தப்படாத, ஆத்துமவஸ்துவில் விகற்பத்தன்மையும், லக்ஷியத்தன்மையும், இவைமுதலான சகலசம்பந்தங்களும் சுத்தகற்பிதம், இதிற் சற்றேனுமையமூறுமல் ஆறுவிதலிங்கத்தோடும், குருமுகமாய் அதின் தாற்பரியத்தை விசாரிப்பது சிரவணமெனப்படும். தான் சிரவணம்பண்ணின அர்த்தத்தை மறவாமல் தனித்திருந்து அனுசந்தானம்செய்கிறது மனனமென்றுகூறப்படும். சிரவணத்தினாலும், மனனத்தினாலுமுண்டாயிருக்கிற திடவிருத்தியினாலே நான் அகண்டன், சின்மாத்திரன் என்றபாவனை இடைவிடாத அனுசந்தானமே நிதித்தியாசனமெனப்படும். தியானம்பண்ணின, சுத்தஜீவனும், சுத்தவிருத்தியும், தியேயமாத்திரமாயிருக்கிற பிரமவஸ்துமாத்திரமே மீதமாகி, காற்றற்றவிடத்திலிருக்கிற தீபம்போல் அச்சுத்தவிருத்தி அப்பிரமவஸ்துவில், இதரதுவைதசலனமின்றி சமமாயிருப்பதே சமாதியெனக் கூறினர். அந்நிர்விகற்பசமாதியில் ஆத்துமாவையே யனுசரித்த அச்சுத்தவிருத்தி யிருக்கிறதென்று அச்சமயம் தெரியாவிடினும், அந்நிர்விகற்பசமாதியிலிருந்து எழுந்தோனுக்கு நானிதுகாலபரியந்தம் சுகமாய்ப் பிரமானுபவம் செய்தேனென்ற ஸ்மரணம் வருவதால், அச்சமயத்தில் அச்சுத்தவிருத்தி இருந்ததென அறிந்துகொள்ளக்கடவது. அச்சமாதியில் அச்சுத்தவிருத்தி இருப்பானேனெனில், இவன் நிர்விகற்பசமாதிக்குப் போகுமுன் செய்த பிரயத்தினத்தாலும், பார்க்கப்படாத புண்ணியவிசேஷத்தாலும் முன் அடிக்கடிசெய்த பிரமாப்பியாச விசேஷபழக்கத்தாலும், அச்சத்துவவிருத்தி யிருந்ததென அங்கீகரிக்கத்தக்கது. காற்றற்றவிடத்திலிருக்கிற தீபம்போல் நிர்விகற்பசமாதியில் விருத்தியிருந்ததென, சர்வலோகசரணியரான கிருஷ்ணபகவான் கீதையில் அருச்சுனனுக்கு இவ்விதமே உரைத்திருக்கின்றனர். இச்சமாதியே தர்மமேகமென்று மேலோர் வெளியிட்டனர். இவ்விதம் குருமுகமாய் தெரிந்துகொண்ட பரோக்ஷ ஞானாக்கினியானது மனதறிந்த பாபத்தையும் தகிக்கிறது. சம்சாரகாரணமான அஞ்ஞானமாகிற இருட்டுக்கு மத்தியான்ன சூரியன்போ லெரிப்பது அபரோக்ஷஞானமென்று கூறி முடித்தனர்.

முற்றிற்று.

𑌶𑍍𑌰𑍀𑌰𑌸𑍍𑌤𑍁.

𑌶𑍍𑌰𑍀𑌗𑌣𑍇𑌶𑌾𑌯 𑌨𑌮𑌃.

𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌗𑌰𑌵𑍇 𑌨𑌮𑌃.

---

𑌶𑍍𑌰𑍀𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌰𑌣𑍍𑌯𑌮𑍁𑌨𑌿𑌕𑍃𑌤 𑌪𑌞𑍍𑌚𑌦𑌶𑍀𑌪𑌦𑌯𑍋𑌜𑌿𑌨𑍀

𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌡𑌭𑌾𑌷𑌾𑌮𑌯𑌪𑌦𑌦𑍀𑌪𑌿𑌕𑌾 𑌪𑍍𑌰𑌾𑌰𑌭𑍍𑌯𑌤𑍇.

---

## 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌵𑍇𑌕𑌃.

---

नत्वा श्री भारतीतीर्थ विद्यारण्य मुनीश्वरौ ।
प्रत्यक्तत्वविवेकस्य क्रियते पददीपिका ॥

𑌨𑌤𑍍𑌵𑌾 𑌶𑍍𑌰𑍀𑌭𑌾𑌰𑌤𑍀𑌤𑍀𑌰𑍍𑌥𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌰𑌣𑍍𑌯𑌮𑍁𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑍌 ।
𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌵𑍇𑌕𑌸𑍍𑌯 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌪𑌦𑌦𑍀𑌪𑌿𑌕𑌾 ॥

ஸ்ரீபாரதீதீர்த்த வித்தியாரண்ணிய முனீசுவரர்களை வந்தனம்பண்ணி பிரத்தியக் தத்துவவிவேகத்திற்கு பததீபிகை செய்யப்படுகிறது.

அவதாரிகை. ஆரம்பிவிக்கப்படுகிற கிரந்தமானது விக்கினமன்றி முடியும் பொருட்டும், விருத்தியடையும்பொருட்டும், பெரியவாளுடைய ஆசரணையி ளுல் அடையப்பட்டதாயிருக்கிற இஷ்டதேவதாரூபமான தன்குருவின் நமஸ் காரலக்ஷண மங்களாசரணமானது தன்னால் செய்யப்பட்டதை சிஷ்ய சி க்ஷார்த்தமாக சுலோகமாகவே செய்கிறார். அதின் அர்த்தத்தினால் விஷயப் பிரயோஜனங்களையும் குறிப்பிக்கிறார்.

### 𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌾𑌰𑌮𑍍𑌭𑌶𑍍𑌲𑍋𑌕𑌃.

नमःश्रीशङ्करानन्दगुरुपादांबुजन्मने ।
सविलासमहामोहग्राहग्रासैककर्मणे ॥

𑌨𑌮𑌃𑌶𑍍𑌰𑍀𑌶𑌙𑍍𑌕𑌰𑌾𑌨𑌨𑍍𑌦𑌗𑍁𑌰𑍁𑌪𑌾𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌨𑍍𑌮𑌨𑍇 ।
𑌸𑌵𑌿𑌲𑌾𑌸𑌮𑌹𑌾𑌮𑍋𑌹𑌗𑍍𑌰𑌾𑌹𑌗𑍍𑌰𑌾𑌸𑍈𑌕𑌕𑌰𑍍𑌮𑌣𑍇 ॥ ௧ ॥

| | |
|---|---|
| 𑌸𑌵𑌿𑌲𑌾𑌸𑌮𑌹𑌾𑌮𑍋𑌹𑌗𑍍𑌰𑌾𑌹𑌗𑍍𑌰𑌾𑌸𑍈𑌕𑌕𑌰𑍍𑌮𑌣𑍇 | காரியசமுகத்தோடே கூடியிருக்கிறமூலாஞ்ஞானமான முதலையை விழுங்குகிறதே முக்கியவேலையாயிருக்கிற |
| 𑌶𑍍𑌰𑍀𑌶𑌙𑍍𑌕𑌰𑌾𑌨𑌨𑍍𑌦𑌗𑍁𑌰𑍁𑌪𑌾𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌨𑍍𑌮𑌨𑍇 | சர்வசம்பத்தினாலே சிஷ்யாளுக்கும் உலகத்திற்கும் ஆனந்தத்தை கொடுக்கிறசங்கரானந்த குருவின் பாதகமலத்தின்பொருட்டு |
| 𑌨𑌮𑌃 (𑌅𑌸𑍍𑌤𑍁) | நமஸ்காரம் செய்யக்கடவது. |

பதசாரம். சுகத்தைச் செய்கிறவர் சங்கரர் சகல ஜகத்திற்கும் ஆனந்தத்தைச் செய்கிறவரான பரமாத்மா, இவரே ஆனந்தத்தை பண்ணிவிக்கிறாரென்கிற சுருதியாலறிக. ஆனந்தரென்கிற சொல்லுக்கு நிரதிசயமான பிரீதிக்கு இருப்பிடமென்று அர்த்தமானதால் பரமானந்தரூபரான பிரத்யகாத்மா, சங்கரானந்தரென்பதற்கு பிரத்யகபின்னபரமாத்மா, அவரேகுரு, இதற்குதாரணம். யாதொருபுருடனுக்கு பரிபக்குவமாய் சித்தம் நிர்மலமாயிருக்கிறதோ அவனுக்கு பந்தரூபமான பாபத்தை நிவர்த்திக்கிறதற்கு ஹேதுவாயிருக்கிற குருநாதனுடையகடாக்ஷவீக்ஷண்யரூபமான தீக்ஷையால் சக்திபாதம்வந்து, மாயை நஷ்டமானவுடன் பரதத்வத்தில் இவர்களை யெவர் சேர்த்துவைக்கிறாரோ அவரே குருவென்று ஆகமத்தில் சொல்லியிருப்பதாலும், ஸ்ரீமானென்பதற்கு அணிமாதி அஷ்டைசுவரியத்வமும் குருவுக்கு இருக்கிறதாக குறிப்பிவிக்கப்பட்டது. இன்னும், ஸ்ரீயினாலே ஆனந்தத்தைச்செய்விக்கிறாரென்றும், அந்தரங்க இஷ்டராயிருக்கிற குருவே வள்ளலென்றும், மேலானமோக்ஷரூபியென்றும் சொல்லாநின்ற சுருதிவாக்கியத்தால் சிஷியர்களுடைய இஷ்டத்தை நிறைவேற்றுவதில் குருவுக்கு வல்லமையிருக்கிறதென்பதும் குறிப்பிவிக்கப்பட்டது. அக்குருவின்பாதங்களே கமலம், அதின்பொருட்டு வணக்கம், அப்பாதம் எவ்விதமாயிருக்கிறதென்றால், நாமரூபாத்மகமான காரிய சமூகத்தோடே கூடிக்கொண்டிருக்கிற மஹாமோஹமென்கிற மூலாஞானமாகிற முதலையானது தன்கையிலகப்பட்டவர்களை மிகவும் பீடிப்பதால், இது மகாகெட்டதென்று நினைத்து அதை விழுங்குகிறதே முக்கியவேலையா யிருக்கிறது. (இதின்விசேஷம்) இதில் சங்கரானந்தரென்கிற இரண்டுபதங்களின் சமானாதிகரணத்தால் கூடஸ்தபிரமத்திற்கு ஏகத்துவமே விஷயம். கூடஸ்தருக்குப் பூரணபிரமரூபமான அபரிச்சின்னசுகோதயமே பிரயோஜனம். மாயையை விழுங்குகிறதென்பதால், அத்தியந்ததுக்கநிவர்த்திரூபமான பிரயோஜனம் வெளிப்படையாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

இதற்குயுக்தி. இருளுக்குச் சூரியனும், கள்ளனுக்குக் காவலனும், வியாதிக்குச் சித்தனும், தரித்திரத்திற்குச் சிந்தாமணியும், பேய்க்கு மந்திரவாதியும் போல குருவின்பாதம் அஞ்ஞானத்தைப் போக்குமென்றறி.

அ-கை. இப்போ அவாந்திர பிரயோஜனத்தோடே கிரந்தாரம்பம் செய்கிறார்.

तत्पादांबुरुहद्वन्द्वसेवानिर्मलचेतसाम् ।
सुखबोधायतत्वस्यविवेकोयं विधीयते ॥

தத்பாதாம்புருஹத்வந்த்வஸேவாநிர்மலசேதஸாம் |
ஸுகபோதாயதத்வஸ்ய விவேகோயம் விதீயதே || உ ||

तत्पादाम्बुरुहद्वन्द्वसेवानिர्मल
चेतसाम् = அந்தகுருவின் பாதங்களாகிற உபயகமலங்களுடைய நமஸ்காரஸ்துதி முதலான பணிவிடையினாலேயே இராகத்வேஷாதி மலரகிதமனதோடேகூடியிருக்கிறபேர்களுக்கு

सुखबोधाय = அனாயாசமாக தத்துவஞ்ஞான முண்டாகிறதின்பொருட்டு
तत्त्वस्य = சொல்லப்போகிற அனாரோபிதமாயிருக்கிற, தத்துவத்தினுடைய
अयं = இந்த, विवेकः = விவேகமானது, विधीयते = விதிக்கப்படுகிறது.

ப-ம். தத்துவவிவேகமென்பதற்கு அர்த்தம். ஆரோபமான பஞ்சகோசாதிஜெகத்தில்நின்றும், ஆத்மாவுக்கு பிரித்தல் சொல்லப்படுகிறது.

இ-தி. வெள்ளாவியில்வைக்கப்பட்ட வஸ்திரத்திற்கு குசும்பாச்சாயமேற்றுவதுபோலும், உரம்வைத்த நிலம் நன்றாய் விளைவதுபோலும், சுத்தகண்ணடியில் முகம் நன்றாய் விளங்குவதுபோலும், வாழைமரத்திலிருக்கிற மேல்மட்டையைப் பிரித்துத் தண்டையெடுப்பதுபோலுமென்றறியத்தக்கது.

அ-கை. ஜீவப்பிரம்மைக்கியமாகிறவிஷயம் சம்பவிக்கிறதின்பொருட்டு ஜீவனுக்கு தன்னுடைய சச்சிதானந்தம் முதலான லக்ஷணத்தை காண்பிவிக்கிறதில் வாஞ்சையுடையவராயுமிருக்கிற இவர் ஆதியில் அவஸ்தாத்திரயத்திலும் அறிவினபேதச்சொல்லால், நித்தியத்துவத்தைச் சாதிக்கிறார். அதில் ஜாக்கிரத்தில் அறிவு ஒன்றாயிருப்பதைக்காண்பிவிக்கிறார்.

शब्दस्पर्शादयोवेद्या वैचित्र्याज्जागरेपृथक् ।
ततोविभक्तातत्संविदैकरूप्यान्नभिद्यते ॥

शब्दस्पर्शादयोवेद्या वैचित्र्याज्जागरेपृथक् ।
ततोविभक्तातत्संविदैकरूप्यान्नभिद्यते ॥ ௩ ॥

जागरे = (சகலேந்திரியங்களினாலேயும் சகலவிஷயஞானமுடைய) ஜாக்கிரத்தில்
वेद्याः = அறியயோக்கியங்களாயிருக்கிற
शब्दस्पर्शादयः = சப்தஸ்பரிசரூபரசகந்தங்கள்
वैचित्र्यात् = (பசு, குதிரைமுதலானவைபோல்) விசித்திரமாயிருப்பதால்
पृथक् = வேறுவேறாயிருக்கின்றன. ततः = அவைகளினின்று
विभक्ता = வேறாயும் तत्संवित् = அவைகளறியுமறிவானது
ऐकरूप्यात् = ஒன்றாயிருப்பதால் न भिद्यते = பேதமடையவில்லை.

ப-ம். சப்தஸ்பரிசாதிகளென்றதால் அந்தகுணங்களுக் காதாரமான ஆகாசாதிபூதங்களும் வேறுவேறென்று சொன்னதாயிற்று. இதில் ஒரு அனுமானம் காண்பிவிக்கிறார். விவாதத்திலிருக்கிற அறிவானது ஸ்வபாவபேதசூன்

னியமாய் இருந்தற்கு யோக்கியமாய் இருக்கத்தக்கது, அதுவே பிரதிக்ஞை. உபாதி அன்றியில் பேதம் சம்பவியாமையே ஹேது, ஆகாசம்போலென்பது திருஷ்டாந்தம். சப்தத்தை அறிகிற அறிவானது ஸ்பரிசத்தை அறிகிற அறிவைக்காட்டிலும் அறிவு அன்னியமற்றிருப்பதால் வேறன்று. ஸ்பரிசத்தை அறிகிற அறிவுபோலே ஒன்றாயிருக்கிற அறிவுக்கு ஆகாசத்தைப்போல உபாதிபேதத்தினலேயே பேதவிவகாரம் கூடுமாகையால் வாஸ்தவமாக பேதம் கற்பிக்கும்பக்ஷத்தில் பெரிதானவிரோதம் ஊஹிக்கத்தக்கதாய்வரும்.

இ-நி. இராஜன் ஒருவனும் படைகள் அநேகமாயும் யுத்தத்தில் காணப்படுவதுபோலும், பஞ்சவர்ணங்களோடேகூடின கண்ணாடிவீட்டுக்குள்ளிருக்கிற புருஷனொருவனும், பிரதிபலிக்கிற்தோற்றங்களநேகமாயும் தோற்றுவது போலும், சுவர் ஒன்றாயும் சித்திரம் பலவாயும், கண் ஒன்றாயும் ரூபம் பலவாயும் தோற்றுவதுபோலுமென்றறி.

அ-கை. இப்போதுசொன்னநியாயத்தை ஸ்வப்பனத்தினுமறிவிக்கிறார்.

तथास्वप्नेत्रवेद्यन्तु नस्थिरं जागरेस्थिरम् ।
तद्भेदोतस्तयोस्संविदेकरूपानभिद्यते ॥

தயாஸ்வப்நேத்ரவேத்யந்து நஸ்திரம் ஜாகரேஸ்திரம் ।
தத்பேதோதஸ்தயோஸ்ஸம்விதேகரூபாநபித்யதே ॥ ச ॥

| | | | |
|---|---|---|---|
| ஸ்வப்நே | ஸ்வப்னவஸ்தையிலும் | ஸ்திரம் | (காலாந்திரத்திலும்) பார்க்க யோக்கியமாயிருக்கிறது |
| தயா | அப்படியே | தத்பேத꞉ | அவைகளின்பேதமிவளவே |
| அத்ர | இந்தஸ்வப்பனத்தில் | அத꞉ | ஆகையினலே |
| வேத்யம் | அறியப்படுகிறவிஷயமானது | தயோ꞉ | அந்தஜாக்கிரஸ்வப்னங்களை |
| ந ஸ்திரம் | ஸ்திரமன்றியிலிருக்கிறது | ஸம்வித் | அறிகிற அறிவானது |
| ஜாகரே | ஜாக்கிரத்தில் | ஏகரூபா (ஸதீ) | ஏகரூபமானதால் |
| (வேத்யம்) | காண்கிறவிஷயமானது | ந பித்யதே | பேதமன்றியிலிருக்கிறது. |

ப-ம். ஜாக்கிரத்தில் விசித்திரஸ்வபாவமாயிருப்பதால் விஷயங்களுக்கு பேதமும் ஒன்றாயிருப்பதால் அறிவு பேதமில்லாமையும் எப்படியிருக்கின்றனவோ அப்பிரகாரமே கரணவியாபாரமற்ற ஸ்வப்பனத்தில், ஜாக்கிரத்தில் இடைவிடாது பழகினதினலுண்டானவிஷயமானது ஸ்வப்பனமென்று சொல்லப்படும். இப்போதுசொன்ன ஸ்வப்பனவஸ்தையிலும் விஷயங்கள் பேதமுள்ளவாயும், அறிவு ஒன்றாயுமிருக்கிறது.

சங்கை. ஜாக்கிரஸ்வப்பனங்கள் இரண்டிலும் அறிவு அபேதமாயும் விஷயங்கள் பேதமாயும் இருக்குமேயானல் அப்போது இது ஸ்வப்பனமென்றும், இது ஜாக்கிரமென்றும் பேதம் வரக்காரணமென்னவென்கிற சங்கைக்கு இந்

த ஸ்வப்பனத்தில் காணப்பட்ட விஷயங்களானவை தோற்றமாத்திரமாயிருப்பதால் ஸ்திரமில்லாமலிருக்கின்றன, ஜாக்கிரத்திலேயோ என்றால் காணப்படுகிற விஷயங்களானவை காலாந்திரததிலும் பார்க்க யோக்கியமாயிருப்பதால் ஸ்திரம். ஆகையால் இவைகளுக்கு ஸ்திராஸ்திரங்களாயிருக்கிறதே பேதமென்றுத்தரம்

இ-தி. வெண்ணைப்பிள்ளையாரும், வெங்கலப்பிள்ளையாரும்போலும், மணலால் கட்டுகிறவீடும், சாமான் சேர்த்துக்கட்டுகிற வீடும்போலும், குழந்தைகள் கரியால் எழுதுவதும், பெரியவர்கள்சரக்கைச்சேர்த்து சித்திரம் எழுதுவதும், வேர்ச்சாயமும், பவுடர் சாயமும்போலவறி, ஸ்வப்பன ஜாக்கிரங்களுக்கு பேதம் சாதிக்கப்பட்டதால் அவைகளிலிருக்கிற அறிவுக்கும் பேதம் சொல்லப்படாதோவெனில், அவ்விரண்டிலும் இருக்கிற அறிவானது ஒன்றாகவேயிருப்பதால் பேதமில்லை. (இ-தி.) கோட்டைக்குவெளியில் படைகளோடு சேர்ந்து யுத்தம்பண்ணின அரசனே மந்திரி முதலானவர்கள் வீட்டுக்குப்போனபிற்பாடு அந்தஅரசனே கோட்டைக்குள் வந்து தான் ஒருவனாக கத்திவீசி காலம்போக்கிறவன் ஒருவனாயிருப்பதுபோலவறி.

அ-கை. இந்தப்பிரகாரம் ஜாக்கிர ஸ்வப்பனங்களில் அறிவுக்கு அபேதத்தைச்சாதித்து சுஷுப்திகாலத்திலிருக்கிற அறிவுக்கும் அந்த அறிவோடே ஐக்கியத்தைச்சாதிக்கும்பொருட்டு அந்த அவஸ்தையிலும் அறிவு இருக்கிறதைச்சாதிக்கிறார்.

सुप्तोत्थितस्यसौषुप्ततमोबोधोभवेत्स्मृतिः ।
साचावबुद्धविषयाऽवबुद्धंतत्तदातमः ॥

ஸுப்தோத்திதஸ்ய ஸௌஷுப்ததமோபோதோ பவேத்ஸ்ம்ருதி:।
ஸா சாவபுத்தவிஷயாऽவபுத்தம் தத்ததா தம: ॥ ரு ॥

ஸுப்தோத்திதஸ்ய சுஷுப்தியிலிருந்து எழுந்திருந்த புருஷனுக்கு [து
ஸௌஷுப்ததமோபோத: சுஷுப்தியிலிருக்குமறியாமையை அறியுமறிவான
ஸ்ம்ருதி: ஸ்மரணரூபமாக | பவேத் பவிக்கிறது
ஸா ச அந்த ஸ்மரணமும் | ததா அந்தசுஷுப்திகாலத்தில்
அவபுத்தவிஷயா { அறியப்பட்டிருக்கிற அஞ்ஞானவிஷயமுடையது. | தத் தம: அந்த அஞ்ஞானமானது
அவபுத்தம் = அறியப்பட்டதாக (பவேத்) பவிக்கிறது.

ப-ம். நித்திரையிலிருந்து எழுந்தவனுக்கு அந்த சுஷுப்தியிலே இருந்த அஞ்ஞானத்தை அறிந்த அறிவு இருந்ததற்கு ஒன்றும் அறியேனென்று வருகிறஸ்மரணம், அடையாளமே தவிர அனுபவமில்லை. அது ஏதினாலெனில், அனுபவஹேதுவாயிருக்கிற பாக்கியார்த்தங்களான இந்திரிய சன்னிதான வியா

ப்திலிங்காதிகளுடைய அபாவத்தாலென்றறிக. அதனால் அதிலென்னவாயிற்றென்றால் அந்த ஸ்மிருதியானது அந்த அஞ்ஞானவிஷயத்தை அறிந்ததாயிற்று. உலகத்தில் எதெது ஸ்மரிக்கப்படுகிறதோ, அதெல்லாம் அனுபவபூர்வமாகவே இருக்கிறது. அதினாலென்னவாயிற்றென்றால் அந்த ஹேதுவினால் ஸுஷுப்தியிலிருக்கிற அஞ்ஞானம் அறியப்பட்டதாயிற்று. இதற்கு அனுமானம் காண்பிவிக்கிறார். விவாதத்திலிருக்கிற ஒன்றும் அறியேனென்கிற அறிவானது ஸ்மிருதிரூபமாயிருப்பதால் அனுபவபூர்வமாக இருக்க யோக்கியமாக இருக்கிறது. (அவள் என் தாயென்று ஸ்மரணம் வருவதுபோல,) யுக்தி யாதொருவன் தீயால் தாபமடைந்தானோ அவனே ஜலத்தில் மூழ்கி எழுந்து குளிர்ச்சியாய் ஒன்றையுமின்னேரம் அறியாமலிருந்தேனென்பதுபோலவறி.

அ-கை. அந்த அனுபவத்தால் தனக்கு விஷயமான அஞ்ஞானத்திற்கு தான் வேறென்பதையும் அந்த அறிவுக்கு இந்த அறிவு அபேதமென்பதையும் சொல்லுகிறார்.

सबोधोविषयाद्भिन्नो नबोधात्स्वप्नबोधवत् ॥

ஸபோதோவிஷயாத்பிந்நோ நபோதாத்ஸ்வப்நபோதவத் ॥ ரு௨ ॥

| | | | |
|---|---|---|---|
| ஸ: | அந்த | போதாத் | அறிவைக்காட்டிலும் |
| போத: | அறிவானது | ந பிந்ந: | வேறன்று |
| விஷயாத் | அறியப்படுமவைக்காட்டிலும் | ஸ்வப்நபோதவத் | ஸ்வப்னத்தை அறிந்த அறிவைப் போல. |
| பிந்ந: | வேறு | | |

வி-ம். அனுமானம் அஞ்ஞானத்தை அறிந்த அறிவானது அறியாயிருப்பதால் அஞ்ஞானத்திற்கு வேறாயிருக்கத்தக்கது. கடத்தை அறிந்த அறிவு கடத்திற்கு வேறாயிருப்பதுபோல. அனுமானம் ஸுஷுப்தியை அறிந்த அறிவானது ஜாக்கிரத்தை அறிந்த அறிவைக்காட்டிலும் வேறாயிருப்பதால் அறிவு அபேதமாயிருக்கத்தக்கது. ஸ்வப்னத்தை அறிந்த அறிவுபோல.

இ-தி. சூரியனையும் தீபத்தையும் இருட்டையும் அறிந்த கண் ஒன்றாயிருப்பதுபோலென்றறி

அ-கை. இப்போது சொல்லப்பட்ட நியாயப்படிக்கி மற்றகாலங்களிலுமறிவு ஒன்றென்பதைக் காண்பிவிக்கிறார்.

एवंस्थानत्रयेप्येकासंवित्तद्वद्दिनान्तरे ।
मासाब्दयुगकल्पेषु गतागम्येष्वनेकधा ॥

ஏவம்ஸ்தாநத்ரயேப்யேகாஸம்வித்தத்வத்திநாந்தரே ।
மாஸாப்தயுககல்பேஷு கதாகம்யேஷ்வநேகதா ॥ கூ௨ ॥

